# பண வாசம்

குரு மித்ரேஷிவா



செல்வம் உங்களைத் தேடி வருவதற்கான
சில ரகசியங்கள்

# பண வாசம்

(செல்வம் உங்களைத் தேடி வருவதற்கான
சில ரகசியங்கள்)

**குரு மித்ரேஷிவா**

# பொருளடக்கம்

**ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு**

- திருவள்ளுவர்

**பொருள்:**

சிறந்த வழியில் செல்வத்தை மிகுதியாகத் தேடிக் கொண்டவர்களுக்கு, அறமும் இன்பமும் தேடி வரும்.

# குரு மித்ரேஷிவா

குரு மித்ரேஷிவா இளமையிலேயே பிரபஞ்சத்தின் ரகசியங்களையும் இயற்கையின் பேருண்மைகளையும் வாழ்வின் பொருளையும் உணர்ந்த ஞானி. பல லட்சக் கணக்கானவர்களின் வாழ்வில் மாற்றங்களை ஏற்படுத் தும் உன்னத நோக்கில் தக்ஷிணா பவுண்டேசன் எனும் ஆன்மிக மையத்தினை வழிநடத்துகிறார். கோவையை தலைமையிடமாகக் கொண்ட தக்ஷிணா பவுண்டேச னுக்கு உலகின் பல நாடுகளில் கிளைகள் உள்ளன. இவரால் உருவாக்கப்பட்ட ஆயிரக்கணக்கான கர்ம யோகிகள் பொதுநலச் சேவைகளில் தங்களை ஆர்வத் துடன் ஈடுபடுத்தியுள்ளனர்.

குரு மித்ரேஷிவா வடிவமைத்த அல்கெமி எனும் அற்புத ஆற்றல் மிக்க பயிற்சி மானுட வாழ்வில் மாற்றங்களை ஏற்படுத்தி, மிகப் பெரிய சமூக மாற்றத்தை உருவாக்கி வருகிறது. அல்கெமி வகுப்புகளினால் லட்சக்கணக்கா னவர்கள் தங்கள் வாழ்வை வளமாக்கிக்கொண்டனர்.

குரு மித்ரேஷிவாவின் அற்புத சிந்தனையில் உருவான 'நீருக்கு நன்றி' எனும் நிகழ்ச்சி மிகப் பெரிய வரவேற் பினைப் பெற்றது. நீருக்கும் உலகிற்குமான தொடர்பு உணர்ச்சிகரமானது. உலகிற்கு ஆதாரமே நீர்தான். நீரின் வற்றாத கருணைக்கு நன்றி செலுத்தும் இந்தப் புரட்சிகரமான இயக்கத்தில் பல லட்சம் பேர் இணைந் துள்ளனர். நீராதாரங்களைப் போற்றிப் பாதுகாக்கும் இவரது முயற்சிக்கு அரசுத் தரப்பிலும் மக்கள் தரப்பிலும் ஆதரவு பெருகியுள்ளது.

கொரோனா காலகட்டத்தில் இவர் உருவாக்கியது 'மித்ரா' திட்டம். இதன் மூலம் வேலைவாய்ப்பிழந்து வறு

மையில் பசியால் வாடிய ஆயிரக்கணக்கான குடும்பங்கள் பசியாறி வருகின்றன.

ஞானத்திற்கான அதிபதியான தேவி இராஜ மாதங்கிக்குத் தமிழகத்தில் மாபெரும் ஆலயம் எழுப்பும் பணியில் தற்போது தீவிரமாக ஈடுபட்டுள்ளார். ஆலய வளாகத்தையொட்டி உருவாகவுள்ள குருகுலம் இந்திய ஞானத்தின் சாராம்சங்களை உலக மக்களுக்கெல்லாம் பரப்பும் அரும்பணியில் ஈடுபடவுள்ளது.

இச்சிறு நூலின் வழியாக திரட்டப்படும் வருவாய் தேவி இராஜ மாதங்கிக்கு ஆலயம் எழுப்பும் அரும்பணிக்கே செலவிடப்படவிருக்கிறது.

# முன்னுரை

ஓர் ஆன்மிக வழிகாட்டி பணம் சம்பாதிப்பதைப் பற்றி, செல்வந்தராவது பற்றிப் பேசலாமா? பணம் என்றால் தீமையல்லவா? செல்வந்தர்கள் எல்லாம் தீய வழியில் சொத்து சேர்த்தவர்கள்தானே? ஊரை அடித்து உலையில் போட்டவர்கள்தானே பெரும்பணக்காரர்கள்? முதலீடு இருந்தால்தானே செல்வம் சேர்க்க முடியும்? பெரிய குடும்பத்தில் பிறந்தவர்கள் ஒருவருக்கொருவர் உதவி செல்வந்தர்களாகிவிடுகிறார்கள் இல்லையா? கோடீஸ்வரர் ஆவதெல்லாம் குருட்டு அதிர்ஷ்டம் தானே? அதற்கெல்லாம் ஒரு கொடுப்பினை வேண்டும் தானே? கடுமையாக உழைத்தால்தானே பணம் சேரும்? சிக்கனமாக செலவு செய்து பணத்தை சேமித்தால் எவர் வேண்டுமானாலும் கோடீஸ்வரர் ஆகிவிடலாம்தானே? குறுக்கு வழியில் சென்றால் ஈஸியாக கோடிகளைக் குவித்து செல்வந்தராகிவிடலாமே?

செல்வத்தைப் பற்றித்தான் நமக்கு எவ்வளவு தவறான புரிதல்கள் இருக்கின்றன என்பதை யோசித்துப் பார்த்தால் ஆச்சரியமாக இருக்கிறது. பணம் எல்லாருக்கும் தேவைப்படுகிறது. செல்வந்தராக வேண்டும், நினைத்த வாழ்க்கையை வாழவேண்டும் என்கிற எண்ணம் எல்லாருக்கும் இருக்கிறது. இன்றைய வாழ்க்கை முறையை மாற்றியே தீரவேண்டும் என்கிற ஆசையும் இருக்கிறது. ஆனால், அதற்கான பாதை மிகவும் கடினமானது என்று அஞ்சுகிறார்கள். தன்னால் உறுதியாக முடியாது என்று நம்புகிறார்கள். துவண்டு போகிறார்கள். அல்லது கண்டதையும் யோசித்து, பலதையும் செய்து, மேலும் மேலும் நட்டமடைந்து தன்னையும் தன்னைச் சார்ந்தவர்களையும் துயரத்தில் ஆழ்த்துகிறார்கள்.

ஆனால், நண்பர்களே... உண்மையில் செல்வந்தராவ தும் கோடிகளைக் குவிப்பதும் மிகவும் எளிதானது. உலகின் அனைத்து மனிதர்களாலும் சாத்தியமானது. அபூர்வ சக்திகள் அதற்குத் தேவையில்லை. தேவையா னது ஒன்றேதான். இயற்கையை, பிரபஞ்சத்தை, சிருஷ் டியைப் பற்றிய சில அடிப்படைப் புரிதல்கள், தெளிவுகள் தான்.

சூத்திரம் புரியாமல்தான் இங்கே பலரும் அல்லாடுகிறார் கள். ஆட்டத்தின் விதிகளைத் தெரிந்துகொண்டால், ஆட்டத்தைப் புரிந்துகொண்டால், அதுவே பாதி வெற்றி. இந்தப் பிரபஞ்சம் உங்களுக்கு எவ்வளவோ கொடுக்க முகம் நிறைய புன்னகையுடன் கைநிறைய புதையலு டன் காத்திருக்கிறது; நீங்களோ முகத்தைத் திருப்பிக் கொண்டு வேறெங்கோ ஓடிக்கொண்டிருக்கிறீர்கள்.

வாருங்கள் நண்பர்களே... ரகசியம் பேசுவோம்.

**- குரு மித்ரேஷிவா**

# செல்வம் சேர எது தடை?

**கேள்வி:** குரு எவ்வளவு உழைத்தும் என்னால் பணக்காரன் ஆகமுடியவில்லை. என்ன காரணம்?

செல்வம் உங்களைத் தேடி வருவதற்கு மிகப் பெரிய தடை எது?

நீங்கள்தான்.

குழம்பாதீர்கள். கோபப்படாதீர்கள். நீங்கள் செல்வந்தர் ஆகாமல் தடுக்கிற ஒரே ஆள் நீங்கள்தான்.

ஒருவரும் சொல்லாத, பெரும்பாலானோர் சொல்லித் தர விரும்பாத ஒரு பிரபஞ்ச ரகசியத்தை உங்களுக்குச் சொல்கிறேன்.

உண்மையில் இந்தப் பிரபஞ்சத்தில் இருக்கக்கூடிய அத்தனைச் செல்வங்களும் நம்மைத் தேடி வந்து கொண்டே இருக்கின்றன. எப்போதுமே அது நம்மை நோக்கி வந்த வண்ணமே இருக்கின்றன.

கையில் காசு இல்லாமல் கடன் தரவும் ஆளில்லாமல் தவித்துக்கொண்டிருக்கிறேன் இப்படிச் சொல்கிறீர்களே என்கிறீர்களா?

இன்று உங்களுக்குச் செல்வம் சேரவில்லை. நீங்கள் ரொம்ப ஏழையாக பணக்கஷ்டத்தில் இருக்கிறீர்கள் என்றால் அதற்கு நிறைய காரணங்கள் இருக்கின்றன. ஆனால், மிகப் பெரிய காரணம் ஒன்று உண்டு. அதைத் தெரிந்துகொண்டால் உங்களை நோக்கிய பணத்தின் பயணம் அன்ஸ்டாப்பபிள்!

ஒரு மனிதனுக்கு பணக்கஷ்டம் அல்லது செல்வம் ஏன் சேரவில்லை என்பதற்கு பற்பல காரணங்கள் சொல்லலாம். அதாவது, வியாபார யுக்தி இல்லை, திறமை

இல்லை, தொலைநோக்குப் பார்வை இல்லை, முன் கோபி, அதிர்ஷ்டம் இல்லை... அதனால் போய்விட்டது, இதனால் கிடைக்கவில்லை என்று அவரவருக்குத் தக்கபடி காரணங்களை அடுக்கலாம். அதெல்லாம் மிகச் சிறிய காரணிகள்தான். மூல காரணம் என்று ஒன்று உண்டு. அதுதான் மிகப் பெரிய ரகசியம்.

இந்த ஒரு பண்பு மட்டும் உங்களுக்குள் வந்துவிட்டால் போதும் செல்வம் உங்களைத் தேடி வரும். நாம் எப்போதுமே இன்னொருவரின் வாழ்க்கையை எட்டிப் பார்த்துக்கொண்டே இருக்கிறோம். பெரும்பாலும் அவர் நமது பக்கத்து வீட்டுக்காரர் ஆகவோ, நண்பராகவோ, உறவினராகவோ இருக்கலாம். அவர் தொழிலில் வளர்கிறார், மிகப் பெரிய செல்வந்தர் ஆகிவிட்டார், மாளிகை கட்டிவிட்டார், லக்ஸூரி கார் வாங்கிவிட்டார், பையன் அமெரிக்காவில் படிக்கிறான், நம்மிடம் இருப்பதைவிட சிறந்த நகை வாங்கிவிட்டார். இதையெல்லாம் பார்க்கும்போது நமக்குள் இருக்கும் உணர்வு உள்ளுக்குள் சந்தோஷப்படுகிறதா? இல்லை, அதைப் பார்த்து பொறாமைப் படுகிறதா? நான் இப்படி ஆக முடியவில்லையே? என்று ஒரு சிறிய வருத்தம் வந்தால்கூட இது ஒரு மிகப்பெரிய தடையாக மாறிவிடுகிறது. உங்களை நோக்கி வந்துகொண்டிருந்த செல்வம் திகைத்துக் குழம்பி நின்றுவிடுகிறது.

குழப்புகிறீர்களே என்கிறீர்களா? ஒரு எளிய கதை மூலம் விளக்குகிறேன்.

பழனிச்சாமியும் முருகேசனும் அடுத்தடுத்த வீட்டில் வசித்து வருபவர்கள். இருவரும் வீட்டின் பின்புறம் சிறிய தோட்டம் ஒன்றை அமைத்து மரம் செடிகொடிகள் வளர்த்து வந்தார்கள். தினமும் காலையிலும் மாலையிலும் தவறாமல் தண்ணீர் ஊற்றி, அதற்குத் தேவையான உரம் வைத்து நன்றாக பராமரித்து வந்தார்கள்.

மலர்களின் தேவதை பூமிக்கு வந்தது. முதலில் பழனிச் சாமி தோட்டத்திற்குள் சென்ற தேவதை, தன் சிறகுக ளால் ஒவ்வொரு மொட்டாக தொட்டுத் தொட்டு பூக்கச் செய்தது. அத்தனை மரங்களும் பூத்துக் குலுங்கின.

முருகேசனின் தோட்டத்திற்குச் சென்றது தேவதை. அதே போல தன் சிறகுகளால் ஒவ்வொரு மொட் டாகத் தொட்டு பூக்கச் செய்துகொண்டிருந்தது. அப் போது முருகேசன் மிகவும் சோகமாக அமர்ந்திருப்ப தைப் பார்த்தது.

முருகேசன் கவலையாக பழனிச்சாமியின் தோட்டத் தைப் பார்த்து, “ஹ்ம்ம்ம்.. அவன் தோட்டத்தில் எவ் வளவு மலர்கள் பூத்திருக்கிறது” என்று தனக்குதானே சொல்லிக்கொண்டான். உடனே தேவதை, ‘ஓஹோ இவருக்குப் பூக்கள் பிடிக்காது போல, இவரது தோட் டத்தை பூக்க வைக்கலாம் என தவறு செய்ய இருந் தோமே. நல்ல வேளை, முன்பே தெரிந்துவிட்டது’ என்று நினைத்து பேசாமல் சென்றுவிட்டது.

பழனிச்சாமி தோட்டத்தில் மட்டும் பூக்கள் பூத்திருப்ப தைக் கண்டு முருகேசன் பொறுமிக்கொண்டே இருந் தான்.

மறுமுறை தேவதை பூமிக்கு வந்தபோது, முருகேசனின் தோட்டத்திற்கு முதலில் சென்றது. ஒரே ஒரு மொட்டை மட்டும் பூக்க வைத்துவிட்டு பழனிச்சாமியின் தோட் டத்திற்குச் சென்றது. அங்கு பழனிச்சாமியோ, முருகேச னின் தோட்டத்தில் பூத்திருக்கும் ஒற்றை மலரை சந் தோசமாகப் பார்த்துக்கொண்டிருந்தான். அந்த ஒற்றை மலரின் சிரிப்பு அவனுக்கு அவ்வளவு மகிழ்ச்சியை அளித்தது. அவனது ஆனந்தத்தைக் கண்ட தேவதை பழனிச்சாமியின் தோட்டம் முழுவதும் பூக்களைக் கொட்டிவிட்டுச் சென்றது.

தேவதை வந்து சென்றதையும் பூக்களைப் பூக்க வைத்ததையும் செடி மறைவில் ஒளிந்து நின்று பார்த்த முருகேசனுக்கு சங்கதி புரிந்துவிட்டது. அடுத்த முறை இந்த தேவதை வரட்டும் ஒரு கை பார்க்காமல் விடுவதில்லை என்று முடிவு செய்து இரவும் பகலும் தோட்டத்தை காவல் காக்க ஆரம்பித்தான் முருகேசன்.

மீண்டும் தேவதை வந்தது. முருகேசனின் தோட்டத்தில் ஒற்றைச் செடியை மட்டும் பூக்க வைத்துவிட்டு பழனிச்சாமியின் தோட்டத்திற்குச் செல்ல முயன்றது. அப்போது மறைந்திருந்த முருகேசன் சட்டென்று தேவதையின் ரெக்கையைப் பிடித்துக்கொண்டான்.

பழனிச்சாமியின் தோட்டத்தைவிட என்னுடையது பெரியது. மரங்களும் பூச்செடிகளும் அதிகமாக இருக்கின்றன, இருவரும் ஒரே போலத்தான் தோட்டத்தைப் பராமரிக்கிறோம். ஆனால், என் தோட்டத்தை விட்டுவிட்டு பழனிச்சாமியின் தோட்டத்தை மட்டும் பூக்க வைக்கிறாய். இது என்ன நியாயம்?' என்றான் முருகேசன்.

அதற்கு தேவதை, "முதல் முறை பழனிச்சாமியின் தோட்டத்தில் பூக்கள் பூத்ததைக் கண்டு நீ மிகவும் வருத்தமடைந்தாய். அதனால் உனக்குப் பூக்கள் பிடிக்காது என்று நினைத்து பேசாமல் சென்றுவிட்டேன். ஆனால், உன் வீட்டில் பூக்கும் ஒற்றைப் பூவைக்கூட கண்டு பழனிச்சாமி மிகவும் மகிழ்ச்சியடைவதைக் கண்டேன். அதனால் அவன் தோட்டத்தில் நிறைய பூக்கள் பூத்தால் இன்னும் மகிழ்ச்சியடைவானே என்று அவன் தோட்டத்தைப் பூக்கச் செய்தேன்" என்றது.

நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள். நம்மைச்சுற்றி இருப்பவர்கள் செல்வந்தராக வாழ்ந்தாலும் சரி, அவர்களுக்குச் செல்வம் வருகிறது என்றாலும் சரி, அதை நாம் பார்க்கும்போது நமக்குள் ஏற்படுகிற வருத்தம் அல்லது பொறாமை, ஏமாற்றம் அல்லது ஏக்கம் இந்த மாதிரி

யான உணர்வுகள் எல்லாமே செல்வத்தைத் தடுக்கும் மிகப் பெரிய தடையாக மாறுகின்றன. இந்த உணர்வுகள் ரொம்ப ரொம்ப முக்கியம்.

ஒருவனின் வளர்ச்சியைப் பார்க்கும்போது நம்முடைய உணர்வு இந்த மாதிரி இருந்தது என்றால், இந்த உணர்ச்சி பிரபஞ்சத்தில் போய் மோதி, அதிர்வாக மாறி, மிகப் பெரிய ஒரு தடையை ஏற்படுத்திவிடும். இது நிறைய பேருக்குத் தெரிவதில்லை.

ஆகவே, நண்பர்களே, செல்வம் உங்களைத் தேடி வர வேண்டுமென்றால், நீங்கள் விரும்பிய வாழ்க்கை முறை அமையவேண்டுமென்றால், நம்மைச்சுற்றி யார் பணக் காரர்கள் ஆகிறார்களோ, பெரிய பொருட்கள் வாங்கு கிறார்களோ, வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக்கொள் கிறார்களோ அவர்களைப் பார்த்து மகிழப் பழகுங்கள். பெரிய அளவில் அவர்களுக்குச் செல்வம் வந்தது என் றால் முதலில் சந்தோசமடையும் ஆள் நீங்களாக இருந் தீர்கள் என்றால் செல்வம் உங்களைத் தேடி வரும். இது தான் செல்வம் உங்களைத் தேடி வருவதற்கான சூட்சு மம்.

எதனால் இப்படி என்று கேட்பீர்களேயானால், இதற்கு விஞ்ஞானப்பூர்வமாகவே ஒரு விளக்கம் தரலாம். இந் தப் பிரபஞ்சம் முழுவதுமே ஓர் ஒத்திசைவுடன் இயங்கிக் கொண்டிருக்கிறது நான் வேறு, இன்னொருவர் வேறு அல்ல. எல்லாமே ஒரே உயிராகச் செயல்பட்டுக்கொண் டிருக்கின்றன. எல்லா உயிர்ப்பொருளும் ஜடப்பொரு ளும் ஒன்றோடு ஒன்று தொடர்பில் இருக்கிறது. Yes, the whole existence is connected, it is one harmonious unity.

இப்படி எல்லாமே ஒன்றுக்கு ஒன்று தொடர்புடையதாக ஒரே உயிராக இயங்கிக்கொண்டிருக்கும்போது யாரோ ஒருவருக்கு செல்வம் வருகிறது என்றால் அவர் யாரோ

ஒருவர் அல்ல. அவரும் உங்கள் உயிருடன் ஒரு தொடர்பில் இருக்கிறார். அவருக்கு வந்த செல்வத்தை நினைத்து வருத்தம் ஏற்பட்டது என்றால் இந்தப் பிரபஞ்சம் என்ன நினைக்கிறது தெரியுமா? ‘ஓஹோ இவருக்கு செல்வம் வந்தது என்றால் வருத்தம் ஏற்படுகிறது; அதனால் இவருக்குக் கொடுக்க வேண்டாம்’ என்று நினைத்து உங்களுக்குச் செல்வத்தைக் கொடுப்பதை நிறுத்திவிடும்.

இதைக் கேட்கும்போது, என்னடா இது ஒரு கட்டுக் கதை போல இருக்கிறதே என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால், இது நூற்றுக்கு நூறு சதவிகித உண்மை. இயற்கையின் உண்மை.

இன்றிலிருந்து நீங்கள் யார் செல்வம் நிறைய வைத்திருக்கிறார்களோ அவர்களைப் பார்த்துச் சந்தோசப்படுங்கள். அவர்களை மனதார வாழ்த்துங்கள், அவர்கள் நன்றாக இருக்கவேண்டும் என்று நினையுங்கள். இப்படி நினைக்கும்போது உங்களையும் தேடி செல்வம் ஓடிவரும்.

குறிப்பாக, இதில் யார் யார் மிகவும் கவனமாக இருக்கவேண்டும் என்றால் டீக்கடை பெஞ்சில் உட்கார்ந்து கொண்டோ அல்லது வீட்டுத் திணையில் உட்கார்ந்து கொண்டோ மற்றவர் வளர்ச்சியைக் கண்டு கிசுகிசுப்பவர்கள், வசைபாடுபவர்கள் எல்லாரும் ஜாக்கிரதையாக இருங்கள். இது போல யாரைப் பற்றி நீங்கள் புலம்பினாலும் திட்டினாலும் எரிச்சல்பட்டாலும் அல்லது பொறாமைப்பட்டாலும் உங்களுக்குக் கிடைக்க வேண்டிய செல்வம் உறுதியாக தடை செய்யப்படும். இது பிரபஞ்சத்தின் ரகசியம்.

அதனால், இன்றிலிருந்து பணம் காசு யாருக்குக் கிடைத்தாலும் உங்களுக்கு கிடைக்கவில்லையென்றாலும் பரவாயில்லை. உங்களைச் சுற்றி இருக்கக்கூடிய

வர்களுக்கு நல்லது நடந்தால், அதைப் பார்த்து சந்தோசப்படும் முதல் மனிதராக நீங்கள் ஆகிவிட்டீர்கள் என்றால், அத்தனை செல்வமும் உங்களைத் தேடி வரும்.

உங்களைத் தேடி நாடி ஓடிவரும் செல்வத்தை திறந்த மனதுடன் வரவேற்கத் தயாராகுங்கள்!

# பட்ஜெட்டில் விழும் பொன்னாடை

**கேள்வி:** குரு, எவ்வளவு சம்பாதித்தாலும் போத வில்லை, செலவுக்கு மேல் வருமானம் வர என்ன வழி?

இந்த அத்தியாயத்திற்கு ஏன் இப்படியொரு தலைப்பு என்று கேட்கிறீர்களா? ஏன் எப்போதும் பட்ஜெட்டில் துண்டு விழவேண்டும். ஒரு மாற்றத்திற்கு பொன்னாடை விழலாமே என்றுதான். :-)

தெருமுனையில் இருக்கும் பெட்டிக்கடைக்காரர் தின மும் ஆயிரத்திற்கும் ரெண்டாயிரத்திற்கும் கஷ்டப்படுகி றார். மளிகைக்கடைக்காரரோ பத்தாயிரம், இருபதாயி ரம் புரட்டுவதற்குப் படாத பாடு படுகிறார். சரி, ஒரு பெரிய ஹோட்டல் முதலாளி? அவரும் தினமும் இரண்டு லட்சத்திற்குப் போராடுகிறார். இதுவே ஒரு பெரிய கார்பரேட் நிறுவனம் என்று எடுத்துக்கொண்டால் 500 கோடிக்கு அல்லாடிக்கொண்டிருப்பார்கள். அரசன் முதல் ஆண்டி வரை பற்றாக்குறைதான்.

எவ்வளவு சம்பாதித்தாலும் பட்ஜெட்டில் இடிக்கிறது. பத் தாயிரம் சம்பாதித்தால் மாதக் கடைசியில் பட்ஜெட் இடிக்கும். முப்பதாயிரம் சம்பாதித்தால் பிரச்சனையில் லாமல் இருக்கலாம் என்று நினைத்தால் நாற்பதாயிரம் செலவு வருகிறது. ஏன் இப்படி? இது கொஞ்சம் மாறி னால் நன்றாக இருக்குமே? எல்லாருக்கும் இந்த ஆசை உண்டு இல்லையா?

இந்த மாதம் ஒரு ஐம்பதாயிரம் செலவு செய்யவேண் டும். ஏகப்பட்ட பொருட்கள் வாங்கவேண்டியிருக்கிறது என்று நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள். உங்கள் வரு மானமோ நாற்பதாயிரம். ஆனால், திடீரென்று இந்த மாத வருமானம் இரண்டு லட்ச ரூபாய் வந்தால்?

ஐம்பதாயிரம் செலவு பண்ண வேண்டும் என்று நினைத் தவுடன் பிரபஞ்சம் உங்களுக்கு இரண்டு லட்சம் கொடுக்கிறது. ஆஹா! இரண்டு லட்சம் கிடைத்துவிட் டதே செலவை இன்னும் கொஞ்சம் அதிகமாக்கினால் என்ன என்று நினைத்து அடுத்த மாதம் ஒன்றரை லட்சம் செலவு செய்கிறீர்கள். உடனே பிரபஞ்சம் உங்களுக்கு மூன்று லட்சம் தருகிறது. அடுத்த முறை மூன்று லட் சம் செலவு செயலாம் என்று நினைத்தபோது, பிரபஞ் சம் ஐந்து லட்சம் கொடுக்கிறது என்று வைத்துக்கொள் ளுங்கள். எப்படியிருக்கும்? மிகவும் நன்றாக இருக்கும் இல்லையா?

செலவு செய்யவேண்டும் என்று நினைத்தவுடன் அதற் கான பணம் கையில் கிடைத்துவிட்டால்... நினைத்துப் பாருங்கள். அதற்காகத்தானே எல்லாரும் இரவும் பக லும் ஓடி ஓடி உழைத்துக்கொண்டிருப்பது.

சரி, ஒருவேளை இப்படி நம் சூழ்நிலை மாறி விட்டது என்றே வைத்துக்கொள்வோம். எப்படியிருக் கும்? இதெல்லாம் நடக்குமா? சாத்தியம்தானா என்று யோசிக்கிறீர்களா? நிச்சயமாக சாத்தியம். சந்தேகமே வேண்டாம்.

அதெப்படி நடக்கும்? இல்லவே இல்லை. ஏதோ கட் டுக்கதை சொல்கிறார் என்று நினைக்கிறீர்கள். அப்ப டித்தானே? கட்டுகதையல்ல இது. தடையில்லாத செல் வத்தைப் பெறுவதற்கு ஒரு சின்ன சூத்திரம் இருக்கிறது. அதைத் தெரிந்துகொண்டால், நான் கூறியது அனைத் தும் சாத்தியம் என்பது உங்களுக்கே புரியும்.

நினைவிருக்கட்டும். ஒரு செலவை நீங்கள் செய்வத னால் உங்கள் செல்வம் ஒருபோதும் குறையாது. செலவு செய்யும்போது உங்கள் மனநிலை என்ன? பணம் கரை கிறதே என்று பயந்து பயந்து செய்தால் எல்லாம் கட் டுக்குள் இருக்கும் என்று நினைக்கிறீர்கள். சிக்கன

மாக செலவு செய்தால் கஷ்டம் இல்லாமல் இருக்கும் என்று நம்புகிறீர்கள். ஆக செலவு செய்யும்போது பயந்து கொண்டே செலவழிக்கிறீர்கள்?

பயந்து பயந்து செலவு செய்தால், வரவுக்குள் வாழ்ந்து விட முடியுமா? அது சாத்தியம் என்றால் இப்படி ஒரு கேள்வி கேட்கவேண்டிய நிலையே யாருக்கும் வந்தி ருக்காதே.

“எனக்கு மாதம் ஐம்பதாயிரம் வருமானம் வந்துகொண் டிருக்கிறது. வீட்டு வாடகைக்கு இவ்வளவு, மளிகைக்கு இவ்வளவு, படிப்புச் செலவு இவ்வளவு, இன்ஸூரன்ஸ் இவ்வளவு, வங்கித்தவணை இவ்வளவு. ஐயோ புதுசா எதாவது செலவு வந்துவிட்டால் பட்ஜெட் இடிக்குமே? காலேஜ் போகும் பயல் திடீரென்று பைக் வேண்டு மென்று கேட்டால் என்ன செய்வது? மனைவி திரு மண நாளுக்கு வைர நெக்லஸ் வேண்டுமென்று கேட் டால் என்ன செய்வது? திடீரென்று அப்பாவிற்கு மருத் துவச் செலவு வந்துவிட்டால் என்ன ஆவது?” இப்படி விதம் விதமாக உங்களுக்கு மாதம் முழுக்க ஒரு பதட்டம் இருந்துகொண்டே இருக்கிறதில்லையா?

பட்ஜெட்டுக்குள் செலவு செய்யவேண்டும், பணத்தை எப்படியாவது மிச்சப்படுத்தி தேக்கி வைத்துவிட வேண் டும் என்று நினைப்பவர்களுக்கு எப்போதுமே பட்ஜெட் டின் மீது ஒரு பதட்டம் இருக்கும். இந்தப் பணம் அப்ப டியே இருக்கவேண்டும். எனக்கு எந்தச் செலவும் வந்து விடக் கூடாது என்று ஒரு பதட்டம் வரும்போது என்ன நடக்கும் என்றால், பிரபஞ்சம் உங்கள் வருமானத்தை நிறுத்திவிடும். இதுதான் மிகப் பெரிய உண்மை.

பதட்டத்தோடு செலவு செய்யக்கூடாது. செலவு செய் வதில் பதட்டமே இருக்கக்கூடாது. செலவு செய்துவிட் டோமே என்ற பதட்டமும் இருக்கக்கூடாது.

அது எப்படி பதட்டம் இல்லாமல் செலவு பண்ணுவது என்று நீங்கள் கேட்பது புரிகிறது.

சூத்திரம் தெரிந்துவிட்டால் பதட்டம் வராது. தெரியாத தால்தான் பதட்டம் வருகிறது.

செலவைக் கட்டுப்படுத்த நினைக்காமல் இந்தச் செல வுக்குத் தேவையான வருமானத்தை நீ கொடுத்துக் கொண்டே இரு. நான் செலவழித்துக்கொண்டே இருப் பேன் என்று மானசீகமாகச் சொன்னால், நமக்குத் தேவையான பணத்தை பிரபஞ்சம் கொடுக்கும்.

சரியாகச் சொல்வதானால், பிரபஞ்சம் நமக்குக் கொடுப் பது இல்லை. அது ஏற்கனவே இருக்கிறது. இது நன்றா கத் தெரிந்தவனுக்குப் புரிந்துவிடும்.

அப்படியென்றால் இதில் எங்கு பிரச்சனை வருகிறது? நீங்கள் செலவு எவ்வளவு செய்தாலும் பிரபஞ்சம் உங்க ளுக்குச் செல்வத்தைக் கொடுத்துக்கொண்டே இருக் கும். ஆனால், இப்போது செலவு செய்யும் பணத் தைக் கொடுக்காமல் வருமானத்தை நிறுத்தி கஷ்டத் தைக் கொடுக்கிறதே, பட்ஜெட்டில் துண்டு விழுகிறதே, இதற்கு என்ன காரணம்?

ஒருமுறை இதே கேள்வியோடு, ரங்கனும் ராஜனும் என்னை வந்து பார்த்தார்கள். அவர்களுக்கு மட்டுமல்ல. அங்கு கூடியிருக்கும் அனைவருக்கும் அனுபவப்பூர்வ மாக இதைப் புரியவைத்தால் என்ன என்று தோன்றியது.

ராஜனை அழைத்து தெருமுனையில் இருக்கும் டீக்க டைக்குச் சென்று ஒரு டம்ளர் பால் யாசகமாக வாங்கி வா என்றேன். சரி என்று வேகமாகச் சென்றவன் சற்று நேரத் தில் முகத்தில் வழியும் நீரைத் துடைத்துக்கொண்டு வந்து, இப்படி செய்துவிட்டீர்களே என்று வருத்தப்பட் டான்.

அடுத்து ரங்கனை அழைத்து, நீ சென்று அதே கடையில் ஒரு டம்ளர் பால் யாசகமாகப் பெற்று வா என்றேன். உடனே ராஜன் பதட்டமாக ஐயோ வேண்டாம் அந்த டீக்கடைக்காரன் கெட்ட கெட்ட வார்த்தையில் திட்டுகிறான் என்றான்.

ரங்கனை அழைத்து அவரது காதில் ஒரு ரகசியத்தைச் சொல்லி அனுப்பினேன். ரங்கன் சிறிது நேரத்தில் ஒரு டம்ளர் பாலுடன் ஒரு பன்னும் கூடுதலாகக் கொண்டு வந்தான்.

ராஜனுக்கு மட்டுமல்ல. அங்கு இருந்த அனைவருக்கும் ஆச்சர்யமாக இருந்தது.

ரங்கன் அந்தப் பாலையும் பன்னையும் அருகே இருந்த மர நிழலில் படுத்திருந்த ஒரு நாய்குட்டிக்கு வைத்துவிட்டு வந்தான். அது வேக வேகமாக வாலாட்டிக் கொண்டே அதைக் குடித்தது.

ரங்கன் என்னிடம், “எனக்கு அந்தச் சூத்திரம் புரிந்து விட்டது” என்றான். ராஜனுக்கு ஒன்றும் புரியவில்லை. இது எப்படி சாத்தியமானது என்று மற்றவர்கள் முழித்துக் கொண்டிருந்தார்கள்.

அப்போது நான் ராஜனிடம் சொன்னேன், “உன்னிடம் பால் யாசித்து வா என்று மட்டும்தான் சொன்னேன். ரங்கனிடம் அந்த நாய்குட்டிக்குக் கொடுப்பதற்கு பால் யாசித்துப் பெற்று வா என்று சொன்னேன்.”

ரங்கனும் மனதிற்குள், டீக்கடைக்காரர் ஒரு டம்ளர் பால் கொடுத்தால், அதைக்கொண்டு இந்த நாய்குட்டிக்குத் தரவேண்டும் என்று நினைத்துகொண்டே சென்று பால் கேட்டான். ஒரு நிமிடம் யோசித்தாலும், டீக்கடைக்காரர் பாலுடன் ஒரு பன்னும் சேர்த்துக் கொடுத்தார்.

நம்முடைய நோக்கம் நல்லதாக இருந்தால், நாம் நினைப்பதைவிட அதிகமாகவே இந்தப் பிரபஞ்சம் நமக்குக் கொடுக்கும். இதுதான் வற்றாத செல்வத்தைப் பெறுவதற்கான சூத்திரமும் கூட.

ஒரு பொருளுக்காகவோ, காரணத்திற்காகவோ அல்லது ஒரு சூழ்நிலைக்காகவோ நீங்கள் செய்கிற செலவு கொடுக்கும் தன்மையில் இருக்கவேண்டும். வாங்கும் தன்மையில் இருக்கக்கூடாது. இதுதான் சூட்சுமம். உங்கள் செலவுக்குப் பின்னால் ஆக்கப்பூர்வமான நோக்கமும் கொடுக்கும் தன்மையும் இருந்தால், அந்தச் செலவுக்கு மேல் செல்வத்தை இந்தப் பிரபஞ்சம் கொடுத்துக்கொண்டே இருக்கும்.

என்னுடைய சொந்த உதாரணத்திலிருந்து ஒன்றைச் சொல்கிறேன். எனக்கு அருளப்பட்ட இந்தப் பிரபஞ்ச ரகசியங்களை, வாழ்க்கையின் பேருண்மைகளை இந்த உலகத்திற்கே சொல்லவேண்டும் என்று நினைக்கிறேன். இந்த உண்மைகள் உலகில் உள்ள எல்லா மக்களுக்கும் போய்ச் சேர வேண்டும் என்பது என்னுடைய நோக்கம்.

இந்த ஞானம் எல்லாருக்கும் போய்ச் சேர வேண்டும். அதே சமயம் இதில் எனக்கு எந்தவித கால விரயமோ நேர விரயமோ ஏற்படக் கூடாது. எல்லா மக்களுக்கும் போய்ச் சேர வேண்டும். சென்னையில் இருக்கும் மக்களுக்கு ஒருநாள் ப்ரோகிராம் நடக்கிறது. மறுநாள் திருச்சியில். அதற்கடுத்த நாள் மதுரையில். அதற்கும் அடுத்த நாள் சிங்கப்பூரில் நடக்கிறது என்று வையுங்கள்.

நடந்தே சென்று சென்னையில் இருக்கும் மக்களுக்கு ஞானத்தைக் கொடுத்துவிட்டு, அங்கிருந்து திருச்சிக்கு நடந்து சென்று நிகழ்ச்சி நடத்துவது என்பது சாத்தியம் அல்ல. நான் எல்லாருக்கும் இதைக் கொடுக்க வேண்டும் என்று நினைக்கிறேன். அதையும் சீக்கிரமா

கச் செய்ய நினைக்கிறேன். அதனால், இப்போது இந்த உண்மையைக் கொடுக்க வேண்டும் என்பதற்காக ஒரு வாகனத்தைக் கேட்கிறேன். எனக்கு ஒரு வாகனம் இருந்தால் நன்றாக இருக்கும். இந்த வாகனம் எனக்குக் கிடைத்தால் நான் இந்தக் காரியத்தைச் செய்வதற்கு, இந்த மகத்தான உண்மைகளை எல்லாருக்கும் கொடுப்பதற்கு வசதியாக இருக்கும் என்ற என் நோக்கத்தை அடிப்படையாக வைத்து, இந்தக் காருக்கு உண்டான செலவை நான் செய்தேன் என்றால், நான் பத்து லட்சம் செலவு செய்து கார் வாங்கினால் இந்தப் பிரபஞ்சம் எனக்கு இருபது லட்சம் கொடுக்கும்.

இதே காரை ஊரில் நாலு பேர் என்னைப் பற்றி பெருமையாகப் பேசவேண்டும். நான் பந்தாவாக சென்று இறங்கினால்தான் எனக்குப் பெருமை என்று என்னுடைய அகங்காரத்தை வளர்ப்பதற்காக இந்தக் காரை வாங்கி இந்தப் ப்ரோகிராம் செய்தேன் என்றால் எனக்கு அந்த பத்து லட்சத்தை பிரபஞ்சம் கொடுக்காது.

நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள். செலவைக் கட்டுப்படுத்துவதனாலோ அல்லது செலவைச் சிக்கனமாகச் செய்வதனாலோ உங்களுக்கு செல்வம் வராது. அந்தச் செலவின் நோக்கம் சரியாக இருக்கவேண்டும்.

நோக்கம்தான் கர்ம வினையை உண்டுபண்ணுகிறது. எப்போது பிரபஞ்சத்தில் ஒரு சிருஷ்டியை நீங்கள் கேட்கிறீர்களோ அதற்குப் பின்னால் இருக்கக்கூடிய நோக்கம் சரியாக இருக்கவேண்டும். சரியான நோக்கம்தான் உங்களுக்கு அனைத்தையும் பெற்றுத்தரும். எதை வேண்டுமானாலும் செய்யலாம். ஆனால், நோக்கம் சரியாக இருந்தால் அது கர்ம வினையை உண்டுபண்ணாது.

அப்படி கர்ம வினை ஏற்படாதபோது பிரபஞ்சம் உங்களுக்குச் செல்வத்தை கொடுத்துக்கொண்டே இருக்

கும். நீங்கள் எவ்வளவு வேண்டுமானாலும் செலவு செய்யலாம். என்னுடைய குடும்பத்திற்காக, எனக்காக ஒரு வசதியான வீட்டைக் கட்டவேண்டும் என்று உங்களிடம் வந்து பணம் கேட்டால் தருவீர்களா? ஆனால், உலகத்திற்கு ஒரு பெரும் ஞானத்தை தரப்போகிறோம், அதற்கு ஒரு கோயில் கட்டப்போகிறேன் அல்லது அனைவருக்கும் கல்வி வழங்குவதற்காக இலவசமாக ஒரு கல்லூரி கட்டப்போகிறேன், அதற்குப் பணம் வேண்டுமென்று கேட்டால் இந்த உலகமே கொண்டுவந்து கொடுக்கும்.

ஒன்றை நன்றாகத் தெரிந்துகொள்ளுங்கள். உங்களுக்காக நீங்கள் எதைச் செய்தாலும், உங்களுடைய அகங்காரத்திற்காகவோ, பேருக்காகவோ புகழுக்காகவோ நீங்கள் செய்யக்கூடிய செலவிற்கான பணத்தை உங்களுக்குப் பிரபஞ்சம் கொடுக்காது. ஆனால், அதே செலவை சரியான நோக்கத்திற்காகச் செய்யும்போது செல்வம் உங்களைத் தேடி வரும்.

ஒருவர் பாட்டு பாடுகிறார். இந்த உலகமே அவர் பாட்டை ரசிக்கிறது. உலக மக்கள் அனைவரும் அந்தப் பாட்டைக் கேட்டாலே ஆனந்தமடைகிறார்கள். எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் என்றோ ஒருநாள் பாடிய சுப்ரபாதத்தை இன்றும் வீட்டில் கேட்கையில் அது மிகப் பெரிய ஆனந்தத்தைக் கொடுக்கிறது இல்லையா?

கேட்பவருக்கு ஆனந்தத்தைக் கொடுக்க வேண்டும் என்று நினைத்து அவர்கள் பாடும்போது பிரபஞ்சம் செல்வத்தைக் கொண்டுவந்து வாசலில் கொட்டும். இன்னும் இன்னும் என செல்வம் மலையாகக் குவியும். எந்த மகத்தான மேதையும் வெறும் பணத்திற்காக இசையை உருவாக்குவதில்லை. வணிக நோக்கங்களுடன் உருவாகும் இசை உங்களை மகிழ்விப்பதில்லை. இரவானால், கண்ணதாசனைத்தானே கேட்கிறீர்கள்? குத்துப்பாட்டைக் கேட்டுவிட்டா தூங்குகிறீர்கள்?

எவ்வளவு வேண்டுமானாலும் செலவு செய்யுங்கள். எந்த நோக்கத்திற்காகச் செய்கிறோமோ அந்த நோக்கம் சரியாக இருக்கும் பட்சத்தில் அது கர்ம யோகமாக மாறி, அதிலிருந்து செல்வம் வந்துகொண்டே இருக்கும். இதுதான் சூட்சுமம்.

இதைத் தெரிந்துகொள்ளாமல் உல்டாவாக மாற்றி தன்னுடைய தனிப்பட்ட சௌகர்யங்களை மட்டுமே கவனத்தில் கொண்டு 'பட்ஜெட் சரியாக வேண்டும்' என நினைத்து, அஞ்சி அஞ்சி செலவு செய்கையில் பய உணர்வுதான் மிஞ்சுகிறது. இந்த பய உணர்வு ஏன் வருகிறது? உங்களுக்காக செலவு செய்வதால் வருகிறது. இன்னொருவருக்காகச் செலவு செய்கையில் இந்த பயம் உங்களுக்கு வராது.

'தமக்கென முயலா நோன்றாட் பிறர்க்கென முயலுநருண்மையானே' எனும் புறநானூற்று வரி முன்வைக்கிற தமிழ்த் தரிசனம் அல்லவா இது. கடலைக் கட்டியாண்ட பாண்டியச் சக்கரவர்த்தி இளம்பெருவழுதிக்குச் செல்வம் இப்படித்தானே குவிந்தது.

தனக்கு என்று ஒன்றை எடுத்துக்கொள்ள நினைக்கும் போது, தன் செல்வம் குறையும்போது ஒருவருக்கு பயம் வரும். அந்த பய உணர்வு ஒரு அதிர்வை உருவாக்கும். அந்த அதிர்வு செல்வத்தைத் தடை செய்துவிடும் அல்லது செலவை அதிகரித்துவிடும். கொடுக்க வேண்டும் என்று நினைக்கும்போது செல்வம் குறைகிறதே என்ற பயமே இருக்காது. அது மனதிற்குள் எதிர்மறை எண்ணங்கள் உருவாகாமல் தடுத்துவிடும்.

நோக்கத்தை சரியாக வைத்து செலவு செய்யுங்கள். எவ்வளவு செலவு செய்கிறீர்களோ அதைவிட பல மடங்கு செல்வம் உங்களுக்கு வந்துகொண்டே இருக்கும். கவலையே படவேண்டாம். இதுதான் சூட்சுமம்.

# மதிப்புக் கூட்டப்பட்ட பணம்

ஒருநாள் பழனிச்சாமியின் மகன் பள்ளிக்கூட பஸ்ஸை தவறவிட்டுவிட்டு அழுதுகொண்டே வீட்டுக்கு வந்தான். உடனே பழனிசாமி மகனை அழைத்துக்கொண்டு சென்று ஸ்கூல் வாசலில் இறக்கிவிட்டார்.

“அப்பா இங்க ஏம்பா வந்த?” என்றான் மகன்.

பழனிச்சாமிக்கு கோபம் தலைக்கேறியது. “என்னடா விளையாடுறியா... நீதானடா டீச்சர் திட்டுவாங்க... இப் பவே ஸ்கூல்ல கொண்டுவந்து விடுங்கன்னு அழுத” என்றார்.

சிறுவன் அழுதுகொண்டே, “ஆனால், இது என் ஸ்கூல் இல்லப்பா” என்றான்.

பழனிச்சாமிக்கு ஒன்றும் புரியவில்லை. தாமதமாக வந் துவிட்டதால் பள்ளிக்கூடம் போகாமல் இருக்க சாக் குச் சொல்கிறான் என்று நினைத்து மகனை சமாதானம் செய்து பள்ளிக்கு அனுப்ப முயன்றார். “அழாத நான் டீச் சர்கிட்ட சொல்றேன் அடிக்கமாட்டாங்க” என்றார்.

சிறுவன் அழுதுகொண்டே, “இது என் ஸ்கூல் இல் லப்பா” என்றான் மறுபடியும்.

“என்னடா உளர்ற... நான்தான அலைஞ்சு திரிஞ்சு சிபா ரிசுக்கு ஆள் புடிச்சு... கால் வலிக்க காத்துக் கிடந்து அட் மிசன் வாங்கி உன்னை இங்கே இரண்டாம் வகுப்பில் சேர்த்துவிட்டேன்” என்றார் கோபமாக.

சிறுவன் கண்ணைத் துடைத்துக்கொண்டு, “அது நாலு வருசத்துக்கு முன்னாடிப்பா... இப்போ நான் ஆறாம் வகுப்பு படிக்கிறேன். அம்மா ரெண்டு வருசத்துக்கு முன்

னாடியே ஸ்கூல் மாத்திட்டாங்க. என் ஸ்கூல் காந்திபுரம் பக்கத்தில இருக்கு" என்றான் பரிதாபமாக.

இங்கு பலரின் நிலையும் இப்படித்தான் இருக்கிறது. எதற்கு சம்பாதிக்கிறோம் என்ற அடிப்படைக் காரணத் தையே மறந்துவிட்டு. பணம் சம்பாதிக்க ஓடிகொண்டே இருக்கிறார்கள்.

நிறைய பணம் வருகிறது, நிறைய தொழில் செய்கி றேன், ஓடிக்கொண்டே இருக்கிறேன். ஆனால், திரும் பிப் பார்த்தால் காலம் போய்விட்டது. என்ன செய்வது என்றே தெரியவில்லை என்று புலம்புகிறார்கள்.

காலை எட்டு மணிக்கு கடைக்குச் சென்றால் இரவு பதினோரு மணிக்குதான் வீட்டுக்குத் திரும்புகிறார்கள். ஒரு நாளைக்கு பதினாறு மணிநேரங்கள் வேலை செய் கிறார்கள். மாதம் ஒரு பத்து லட்சமோ பதினைந்து லட் சமோ சம்பாதிக்கிறார்கள். ஒரு கடையில் இவ்வளவு வருமானம் வருகிறது என்று தெரிந்தவுடன், இன்னொரு கடை திறந்தால் என்னவென்று அடுத்தக் கடையைத் திறப்பார்கள். அதன் பிறகு மற்றொன்று, அடுத்து இன் னொன்று இப்படி ஐம்பது நூறு என்று கடைகள் திறந்து கொண்டே இருப்பார்கள்.

பத்து மணிநேர உழைப்பு பதினைந்து மணிநேரமாக அதிகரிக்கும். பிறகு பதினெட்டு மணி நேரம் ஆகும். அதன் பிறகு தூக்கம் இல்லாமல் விடிய விடிய ஓடவேண் டியிருக்கும்.

பதினைந்து லட்சம் சம்பாதித்துக் கொண்டிருந்தால், அறுபது லட்சம் சம்பாதிக்க ஓடுவார்கள். பிறகு, எண்பது லட்சம் சம்பாதிக்க ஓடுகிறார்கள். இது என்ன பைத்தி யக்காரத்தனம்? முதலில் இந்தப் பதினைந்து லட்சத்தை எப்படி அனுபவிக்கப் போகிறீர்கள்? என்று யோசித்துப் பாருங்கள்.

பணம் ஒருபுறம் கோடிக்கணக்கில் சேர்ந்துகொண்டே இருக்கிறது. வயதும் ஒருபுறம் கூடிக்கொண்டே இருக்கிறது. அம்பது அறுபது வயதாகிய பிறகு, சாப்பிட முடியவில்லை, நடக்க முடியவில்லை, நின்றால் உட்கார முடியவில்லை, உட்கார்ந்தால் காலைத் தொங்கவிட முடியவில்லை.

நினைத்த இடத்திற்குப் போக முடியவில்லை, படுத்தால் தூக்கம் வருவதில்லை, ஆரோக்கியம் இல்லை, உடலும் மனமும் ஒரு நிலையில் இல்லை, மனைவி மக்களோடு இருப்பதற்கு வழியில்லை, மகன் என் மீது அன்பாக இல்லை, என் பேரனுடன் என்னால் நேரம் செலவிட முடியவில்லை, நிம்மதி இல்லை, வாழ்க்கை நரகமாக மாறிவிட்டது.

நாஞ்சில் நாட்டுப் பகுதிகளில் ‘நாய் பெற்ற தெங்கம்பழம்’ என்றொரு சொலவடை உண்டு. பொருள் புரிகிறதுதானே? நாயிடம் இளநீர் கிடைத்தால் என்ன நடக்கும்? போட்டு உருட்டிக்கொண்டும், பல்லினால் கறமிக்கொண்டும் கிடக்கும். அப்படித்தான் இங்கு பலரும் செல்வத்தைப் போட்டு உருட்டிக்கொண்டிருக்கிறார்கள்.

எதற்காக இத்தனை காலம் ஓடி ஓடி சம்பாதித்தேன் என்றே இப்போது எனக்குப் புரியவில்லை என்று சொல்லும் ஒரு மனிதனையாவது தினமும் சந்திக்கிறேன்.

முருகேசன் அண்ணாச்சி திருமணமான நாளிலிருந்து எப்போதும் தன்னுடைய மளிகைக் கடையிலேயே இருப்பார். இரவு பகல் பாராது வேலை செய்து கொண்டே இருப்பார். அஞ்சு பைசா, பத்து பைசா வைக்கூட விடமாட்டார். கறாராகக் கேட்டு வாங்கிக் கொள்வார். கடைப்பையன் தெரியாமல் கல்லா பக்கம் சென்றாலும் கடித்துக் குதறிவிடுவார். இப்படியே நான்கு

கடைகள் திறக்கும் அளவிற்குத் தொழிலையும் வளர்த்துவிட்டார்.

இரவு வெகுநேரம் கழித்தே வீட்டுக்குச் செல்வார். சமயங்களில் கடையிலேயே படுத்துக்கொள்வார். இந்தச் சமயத்தில்தான் கொரோனா வந்து நாடு முழுவதும் ஊரடங்கு வந்தது. வேறு வழியில்லாமல் அன்று மதியமே கடையை அடைத்துவிட்டு வீட்டுக்குச் சென்றார். வீட்டு வாசலில் தன் மகளோடு ஒரு சிறுவன் விளையாடிக் கொண்டிருந்ததைப் பார்த்தார்.

வியப்புடன் அவர்களைப் பார்த்துக்கொண்டே உள்ளே சென்ற அண்ணாச்சி மனைவியிடம், "யாரும்மா அந்தப் பொடியன்" என்று கேட்டார். மனைவி கடும் கோபத்தில் கையில் இருந்த தேங்காயை அண்ணாச்சி மேல் வீசி எறிந்துவிட்டு, பிள்ளையைத் தூக்கிக்கொண்டு அம்மா வீட்டிற்குச் சென்றுவிட்டார். அண்ணாச்சி வெலவெலத்துப் போய்விட்டார். அவருக்கு ஒன்றும் புரியவில்லை.

மறுநாள் மாமியார் வீட்டிற்குச் சென்றபோதுதான் முருகேசனுக்கு சங்கதி புரிந்தது. விளையாடிக்கொண்டிருந்தது அண்ணாச்சியின் இரண்டாவது மகன்.

உங்கள் வாழ்க்கையைக் கொஞ்சம் நிதானித்து கூர்ந்து கவனித்துப் பாருங்கள். உங்களுக்கே புரிந்துவிடும். என்ன நடந்திருக்கிறது என்று. இருபத்துநான்கு மணி நேரமும் சொத்து சேர்ப்பதற்காக ஓடிக்கொண்டே இருந்தீர்கள். ஆனால், எதற்காக, யாருக்காக இதைச் செய்கிறோம் என்ற உண்மையை மட்டும் மறந்துவிட்டீர்கள்.

நீங்கள் செய்யவேண்டியது என்ன என்பதையே அறியாமல் பணத்தை மட்டுமே குறிக்கோளாக வைத்து அதன் பின்னால் மூச்சிரைக்க ஓடிவிட்டீர்கள்.

உண்மையில், நீங்கள் சம்பாதிக்க வேண்டியது பணத்தை அல்ல, நேரத்தை. அனைவரிடமும் நான் எப்போதும் சொல்வது ஒன்றுதான். "You need to buy time"" நேரத்தைதான் ஒரு மனிதன் சம்பாதிக்க வேண்டும்.

இன்று ஒரு பத்தாயிரம் ரூபாய் போய்விட்டால் நாளை சம்பாதித்துவிடலாம். ஆனால், நேரம் போய்விட்டது என்றால் திரும்பி வராது. அதனால், நேரத்தைதான் ஒருவர் சம்பாதிக்க வேண்டும்.

எவ்வளவு முடியுமோ அவ்வளவு சம்பாதியுங்கள். தினமும் பத்து மணிநேரம் உழைக்கிறீர்கள். மாதம் பதினைந்து லட்சம் வருமானம் வரக்கூடிய அருமையான ஒரு தொழிலைக் கண்டுபிடித்து அதை வெற்றிகரமாகச் செய்துகொண்டிருக்கிறீர்கள். அடுத்து ஒரு கடை போடலாமா என்று யோசிக்கும் முன்பு அதற்குச் செலவாகும் நேரத்தைப் பற்றி முதலில் யோசியுங்கள்.

ஏனென்றால், அடுத்து ஒரு கடை போடும்போது அது கூடுதலாக ஒரு பத்து மணிநேரத்தை எடுத்துக்கொண்டுதான் உங்களுக்கு இன்னொரு பதினைந்து லட்சம் வருமானத்தைத் தரும். பதினைந்தும் பதினைந்தும் முப்பது லட்சம் வருமானம் வருகிறது என்றே வைத்துக்கொள்வோம். ஆனால், இந்த முப்பது லட்சத்தை எப்படி அனுபவிக்கப் போகிறீர்கள் சார்? அதற்கான நேரம் உங்களிடம் இருக்கிறதா? பணம் சம்பாதிப்பதிலேயே நேரத்தை முழுவதும் செலவு செய்துவிட்டீர்களே. நீங்கள் தொட்டுக் குளிப்பாட்டி வளர்த்திருக்க வேண்டிய பையன் இப்போது காலேஜ் போகிறான். இப்போது குளிப்பாட்ட முடியுமா? மாலைத் தென்றலின் சுகந்தத்தை அனுபவித்தபடியே காதல் மொழி பேசி கொஞ்சியிருக்கவேண்டிய காதல் மனையாட்டிக்கு இப்போது கால் வலி வந்துவிட்டதே? மாலை நடையை மனதிற்குள்ளா கூட்டிப்போவீர்கள்? சொக்காரனின் கல்யாணத்

தில் முன்வரிசையில் நின்று வருபவர்களை வரவேற்று பட்டு வேட்டியை மடித்துக் கட்டி சாம்பார் வாளியை கையிலேந்தி பந்தி விளம்பியிருக்க, அவரை இன் னொரு கல்யாணமா செய்துகொள்ளச் சொல்வீர்கள்?

அப்படியென்றால் என்னதான் செய்வது?

சொல்கிறேன்.. புத்திசாலி செய்யவேண்டியது என்ன வென்றால் பத்து மணிநேரம் செலவு செய்து பதினைந்து லட்சம் சம்பாதிக்கும் திறனை வைத்து, அதே பதி னைந்து லட்சத்தை ஐந்து மணிநேரத்தில் எப்படிச் சம் பாதிப்பது என்று யோசிக்க வேண்டும். சாத்தியமாகிவிட் டது என்றால் அது ஒரு மிகப் பெரிய சாதனை.

இப்படி, பத்து மணிநேரத்தில் சம்பாதிக்கும் பணத்தை ஐந்து மணிநேரத்தில் சம்பாதித்துவிட்டீர்கள் என்றால் மீதம் இருக்கும் ஐந்து மணிநேரத்தை உங்களுக்காகச் செலவு செய்யலாம் அல்லவா? குடும்பத்துடன் நேரம் செலவிடலாம். உடம்பைக் கவனித்துக்கொள்ளலாம். மனதை அமைதியாக வைத்துக்கொள்ளலாம். படிக்க லாம். எழுதலாம். பாட்டு கேட்கலாம். பயணம் போக லாம். உங்களுக்கு விருப்பமானதைச் செய்யலாம்.

அடுத்த முறை ஐந்து மணிநேரத்தில் சம்பாதித்த பணத்தை ஒரு மணிநேரத்தில் சம்பாதிக்க முடியுமா என்று பார்க்க வேண்டும். அப்போது ஒன்பது மணிநே ரம் உங்கள் கையில் இருக்கும். இந்த ஒன்பது மணிநே ரத்தில் உங்கள் வாழ்கையை தரமான வழிகளில், உயர் வான ரசனைகளில் எப்படியெல்லாம் அனுபவிக்கலாம் என்று கொஞ்சம் கற்பனை செய்து பாருங்கள். மிகப் பெரிய சக்திவாய்ந்த நிலைக்கு வந்துவிடுவீர்கள். இது தான் மிகப் பெரிய சொத்து.

அதாவது, செல்வமும் இருக்கவேண்டும். அந்தச் செல் வத்தை அனுபவிக்கக்கூடிய நேரமும் இருக்கவேண்

டும். நல்ல ஆரோக்கியமும் அமைதியும் வேண்டும். நினைப்பதைச் செய்யமுடியவேண்டும். அப்போதுதான் சம்பாதித்த பணத்தை அனுபவிக்க முடியும்.

அனைவரும் என்மீது அன்பாக இருக்கவேண்டும். இந்த உலகமே என்னை நேசிக்க வேண்டும் என்று விரும்பினால். இந்த உலகத்திற்காக நீங்கள் ஏதா வது செய்துதான் ஆகவேண்டும். நண்பர்கள், மனைவி, குழந்தை, தாய், தந்தை, குடும்பம் மற்றும் சமுதாயத்திற் குக் கட்டாயம் ஏதாவது செய்யவேண்டும். அதற்கெல் லாம் நேரம் தேவை. அதனால், நேரத்தைச் சம்பாதிக்க வேண்டும். அப்போதுதான் அன்பைச் சம்பாதிக்க முடி யும்.

பதினைந்து லட்சம் வருமானம் இருக்கிறது. அதை அனுபவிப்பதற்கு உண்டான நேரம் இருக்கிறது. அன் பைச் சம்பாதிக்க அந்த நேரத்தைச் செலவிட முடிகிறது. நினைத்ததை எல்லாம் செய்வதற்கும் நேரம் கிடைக்கி றது என்றால் நீங்கள்தான் ராஜா. ராஜா என்றா சொன் னேன், மகாராஜா. இல்லை, இல்லை. அப்படி வாழ்ப வன் பெயர் சக்கரவர்த்தி.

இப்படிப்பட்ட வாழ்க்கைதான் மிகப் பெரிய சொத்து. இதைச் செய்வதில் என்ன சிக்கல்? உங்கள் உயிர் மூல மும் செய்யும் வேலையும் ஒத்திசையாமல் இருப்பது தான் சிக்கல். கொஞ்சம் குழப்பமாக இருக்கிறதல்லவா? விளக்குகிறேன்.

வாரத்தில் ஏழு நாட்கள் இருக்கிறது. அதில் உங்க ளுக்குப் பிடித்த நாள் எது என்று கேட்டால், உங்கள் பதில் என்னவாக இருக்கும்? எனக்கு ஞாயிற்றுகிழமை தான் மிகவும் பிடிக்கும். நீங்கள் மட்டுமில்லை, நூற்றுக்கு தொண்ணூற்று ஒன்பது பேர் யோசிக்காமல் பட்டென்று சொல்லும் பதிலும் இதுதான்.

ஏன்? ஏனென்றால் ஞாயிற்றுகிழமைதானே விடுமுறை. உண்மையில் அது விடுமுறை என்பதால் அல்ல. ஞாயிற்றுகிழமையைதான் உங்களுக்காக நீங்கள் செல விடுகிறீர்கள். மற்ற நாட்களில் உங்களுக்காக நீங்கள் நேரம் செலவு செய்வது இல்லை. பணம் சம்பாதிக்க வேண்டும் என்று ஓடிக்கொண்டிருக்கிறீர்கள். நரகத்தில் இருக்கிறீர்கள்.

ஞாயிற்றுகிழமை மட்டும்தான் உங்களுக்காக செலவ ளிக்கிறீர்கள். அன்று என்ன வேலை வேண்டுமானாலும் செய்யலாம். பிள்ளைகளுடன் விளையாடலாம். உங்கள் அறையைச் சுத்தம் செய்யலாம். சமையல் செய்யலாம். மீன் தொட்டியில் தண்ணீர் மாற்றலாம். குடும்பத்தோடு மைதானத்திற்குச் செல்லலாம். இவைகளும் ஒருவ கையில் வேலைதான். ஆனால், இவை உங்களுக்குப் பிடித்த வேலைகள். எப்போது செய்யலாம் என்று நீங்கள் ஏக்கத்தோடு காத்திருக்கும் வேலைகள்.

ஆக மொத்தத்தில் தொண்ணூற்று ஒன்பது பேருக்குப் பிடித்தது இந்த ஞாயிற்றுக்கிழமைதான். அந்த ஒருநாள் ஓய்விற்காக மீதம் இருக்கும் ஆறு நாட்கள் படாத பாடு படுகிறார்கள். அப்படியென்றால் உண்மையில் எது சந் தோசத்தைத் தருகிறது. நினைத்ததை, பிடித்ததை செய் யகூடிய நேரம். அது என்றைக்குக் கிடைக்கிறதோ அன் றுதான் நீங்கள் சந்தோசமாக இருக்கிறீர்கள்.

நினைத்துப் பாருங்கள். ஏழு நாட்களில் ஆறு ஞாயிற்றுக் கிழமை இருந்தால் எப்படி இருக்கும்? மிகவும் நன்றாக இருக்கும் இல்லையா? எப்படித் தொழிலைப் பெருக்கு வது என்று மட்டுமே சிந்திக்காமல் நேரத்தை எப்படிச் சம்பாதிக்க முடியும் என்று யோசியுங்கள். ஏழு நாட்களும் ஞாயிற்றுக்கிழமையாகும்.

அப்படி ஏழு நாட்களும் ஞாயிற்றுக்கிழமையாக இருந்து, வாழ்க்கையே விடுமுறை நாட்களாகிவிட்டதென்றால்

அதைவிட ஆனந்தம் என்ன இருக்கிறது? அந்த ஆனந்தத்தில் பிறப்பதுதானே மகா சக்தி. ‘கண்முன் நிற்கும் காரியமே சக்தி’ என்று பாரதி சொல்வது இதைத்தானே.

எப்போது உங்களுக்குள் இருக்கும் உயிர் மூலமும் நீங்கள் செய்யும் வேலையும் ஒத்திசைகிறதோ அப்போது எல்லா நாளும் ஓய்வு நாள்தான். எப்போதுமே ஆனந்தம்தான்.

பணத்தை மட்டும் சம்பாதித்து வாழ்கையைத் தொலைத்தவர்கள் பட்டியலில் நீங்களும் சேர்ந்துவிடாதீர்கள். நேரத்தைச் சம்பாதியுங்கள். பயனுள்ள காரியங்களில் சேமித்த நேரத்தைச் செலவிடுங்கள்.

# சம்பாத்தியத்தில் எவ்வளவு தானமாக வழங்க வேண்டும்?

**கேள்வி:** குரு, நான் நிறைய பணம் சம்பாதிக்கிறேன். சம் பாதித்த பணத்தை தானதருமம் செய்யுங்கள், அப்போ துதான் உங்களுக்குப் புண்ணியம் கிடைக்கும் என்று நிறைய பேர் என்னிடம் சொல்கிறார்கள். நான் எவ்வளவு தானமாகக் கொடுப்பது?

எவ்வளவு தானம் கொடுக்க வேண்டும் என்பதை யாருமே நிர்ணயம் செய்ய முடியாது.

இயற்கையின் சட்டத்தை முதலில் நீங்கள் நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டும். இயற்கையின் சட்டத்திற்கு உட்பட்டு நடப்பவர்களுக்கு எந்தப் பிரச்சனையும் வராது. ஆனந்தமாக இருக்கலாம். எதற்காகப் பிறந்திருக்கிறீர் களோ அதன் முழுப் பயனையும் அடையலாம். இதற்கு மாறாக செயல்பட்டால் அனைத்துப் பிரச்சனைகளும் உங்களைத் தேடி வரும்.

இயற்கையிலும்கூட ஏற்றத் தாழ்வுகள் இருக்கத்தான் செய்கின்றன. நம் சமுதாயத்தையே எடுத்துக்கொள் ளுங்களேன், ஒருவர் பத்து ரூபாய்க்குப் படாத பாடுபடு வார். மற்றவரோ அலுங்காமல் குலுங்காமல் பத்தாயிரம் கோடிக்கு அதிபதியாக இருப்பார்.

ஒருவர் கூலி வேலை செய்பவர், மற்றொருவர் கடை முதலாளி, ஒருவர் அரசியல்வாதி, மற்றொருவர் பெரிய தொழில் அதிபர், இன்னொருவர் கலைத்துறையில் பெரும் புகழ் அடைந்தவர். இப்படி பல விதமான மனி தர்கள் இருக்கிறார்கள். ஒருவரிடம் புகழ் நிறைய இருக் கிறது, மற்றவரிடம் பணம் நிறைய இருக்கிறது. ஒருவரி டம் பெரும் அதிகாரம் இருக்கிறது, இன்னொருவரிடம்

பேருக்குக்கூட அதிகாரம் இல்லை. ஏன் இப்படி? என்ன நியதி? இதெல்லாம் எப்படி தீர்மானமாகிறது? சார், இது தான் இயற்கையின் நியதி.

இயற்கை ஏன் ஒரு குறிப்பிட்ட மனிதனுக்கு ஒன் றைக் கொடுக்கிறது. அதுவும் அளவுக்கு அதிகமாகக் கொடுக்கிறது?

இந்த சிருஷ்டியைக் காப்பாற்றுவதற்காக.

ஆம், உங்கள் மூலமாக இந்த சிருஷ்டியைக் காப்பற் றுவதற்காகவே இயற்கை உங்களுக்கு அள்ளிஅள்ளிக் கொடுக்கிறது.

ஒரு மனிதனின் தேவைக்கு அதிகமாக இயற்கை யின் தர்மப்படி செல்வம் வருகிறது என்றால் அதன் பொருள் செல்வம் முழுவதும் அவர் ஒருவருக்கானது மட்டுமேயல்ல என்பதுதான். இந்த உலகத்தில் இருக் கும் அனைவருக்கும் சேர்த்தே வழங்கப்பட்டிருக்கிறது. அதை விநியோகம் செய்யவேண்டியது உங்கள் கடமை. இயற்கை உங்களை அதற்காகத் தேர்ந்தெடுத்திருக்கி றது.

உதாரணமாக, ஒரு ஆசிரியர் தன் அறிவை மாண வர்களுக்கு வழங்க வேண்டும். நான் படித்தேன், இது என்னுடைய அறிவு, இதை நான் யாருக்கும் கொடுக்க மாட்டேன் என்று வைத்துக்கொண்டார் என்றால் அவ ருடைய அறிவு அப்படியே இருக்கலாம். வளர வாய்ப் பில்லை. மாறாக, மறதியினால் குறையவும் கூடும். ஆனால், மற்றவர்களுக்குக் கற்றுக்கொடுக்க வேண் டும் என்று நினைக்கும்போது தன்னியல்பாக நிறைய வாசிப்பு, முன்தயாரிப்பு, தகவல் சேகரிப்பு போன்றவை நடக்கும். அறிவு பல்கிப் பெருகும்.

பகிர்ந்துகொள்ளாதபோது அறிவு மட்டுமல்ல, எதுவுமே பெருகாது. மாறாக, புதிதாக வரவேண்டியதும்கூட வராமல் நின்றுவிடும்.

நீங்கள் ரொம்ப காலம் ஆராய்ச்சி செய்து ஒரு பொருளைக் கண்டுபிடிக்கிறீர்கள். இதைக் கண்டுபிடித்தது நான், வடிவமைத்தது நான். ஆகவே, யாருக்கும் தரமாட்டேன் எனப் பெட்டிக்குள் வைத்துப் பூட்டிக்கொண்டீர்கள் என்றால் அதனால் யாருக்கு என்ன பயன்? அந்தக் கண்டுபிடிப்பு பயனாளர்களைச் சென்று சேராவிட்டால் உங்களுக்கு வருமானம் எங்கிருந்து வரும்? அதிக அளவில் உற்பத்தி செய்து விற்பனை செய்தால்தானே வருமானம் வரும். அந்தப் பணத்தைக் கொண்டு மீண்டும் பொருட்கள் தயாரித்து விற்கலாம். இதுவொரு சுழற்சி முறை.

இயற்கையும் இதே சுழற்சி முறையில் இயங்கக்கூடியதுதான். இதில் விசேஷம் என்னவென்றால் இயற்கை அளப்பரிய கருணை மிக்கது. ஒன்று கொடுத்தால் ஒன்பதாகத் திரும்பக் கொடுக்கும் இயல்புடையது இயற்கை.

# எது செல்வம்?

**கேள்வி:** குரு, வெறும் பணத்தால் பயனில்லை என்று சொல்லிவிட்டீர்கள். செல்வம் என்றால் என்ன? பணம் மட்டுமே செல்வம் இல்லையென்றால் வேறு எவை செல்வம்?

நம் சமுதாயத்தில் ஒரு வழக்கம் உண்டு. யாராவது கால்களில் விழுந்தால், 'பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழ்க' என்று வாழ்த்துவார்கள். அதென்ன பதினாறு? பலருக்கும் அதன் அர்த்தம் புரிவதில்லை. சிலர் பணம் என்று நினைத்து நிறைய பணத்தைச் சேகரித்துக் கொண்டே இருப்பார்கள். இன்னும் சிலரோ பதினாறு என்பது குழந்தைகளைக் குறிப்பதாக நினைத்து பெற்றுக்கொண்டே இருப்பார்கள்.

உண்மையில் செல்வம் என்பது பணம் மட்டுமில்லை. ஆரோக்கியம், தைரியம், அதிகாரம், சக்தி, புகழ், ஆனந்தம், அன்பு, ஞானம் இப்படி நிறைய செல்வங்கள் இருக்கின்றன. ஒரு மனிதனுக்கு, செல்வம் கிடைக்கட்டும் என்று வாழ்த்தும்போது பணத்தை மட்டும் குறிப்பிட்டு யாரும் வாழ்த்துவதில்லை. சகல செல்வத்தையும் உத்தேசித்தே வாழ்த்துகிறார்கள்.

இன்னும் சரியாகச் சொன்னால் பணத்தை சம்பாதித்துக் கொடுக்கக்கூடிய திறன்தான் நிஜமான செல்வம்.

ஒரு விளையாட்டு வீரர் இருக்கிறார். அவருக்குக் கோடி கணக்கில் பணம் குவிகிறது. இதில் செல்வம் என்பது பணம் இல்லை. அவரின் திறமை. விளையாட்டு என்ற திறனை இறைவன் கொடுத்திருக்கிறார். அந்தத் திறனை வைத்து அவர் பல கோடி சம்பாதிக்கிறார்.

ஒரு இசையமைப்பாளருக்கு இசை என்னும் ஞானத் தைக் கொடுத்திருக்கிறார். அதை வைத்து அவருக்கு நிறைய செல்வம், புகழ் வருகிறது.

இன்னொருவருக்கு தொழில் செய்யக்கூடிய திறன் இருக்கிறது. அவர் அதைக்கொண்டு கோடிக்கணக்கில் சம்பாதிக்கிறார்.

இப்படி ஒவ்வொருவருக்கும் விதம் விதமான திறன் களை இயற்கை அளித்திருக்கிறது. இந்தத் திறன்களை ஒருவருக்குக் கொடுப்பதற்கு என்ன காரணம்?

சற்று முன்புதானே அதை வைத்து பணம், பேர், புகழ் சம் பாத்திக்கலாம் என்று சொன்னீர்கள். திரும்பவும் அதே கேள்வியைக் கேட்கிறீர்களே என்று நினைக்கிறீர்களா? கண்டிப்பாக, திறனைக் கொண்டு அவை அனைத்தை யும் சம்பாதிக்கலாம். அதில் சந்தேகமே வேண்டாம் உங் களுக்கு.

ஆனால் அந்தத் திறனை, திறனால் பெற்ற செல்வத் தைக் கொண்டு என்ன செய்கிறீர்கள் என்பதற்கான நோக்கம் இயற்கையின் சட்டத்திற்குள் இருக்கவேண் டும் என்கிறேன்.

தன் திறன் கொண்டு பணம் சம்பாதித்து தனக்கு மட்டும் வைத்துக்கொள்வதற்காகவா இயற்கை ஒருவருக்குத் திறனை வழங்குகிறது? நிச்சயமாக இல்லை. கிடைத்த செல்வத்தில் தனக்குத் தேவையானதை மட்டும் வைத் துக்கொண்டு மற்றவை அனைத்தையும் சிருஷ்டியைக் காப்பாற்றுவதற்காகப் பயன்படுத்த வேண்டும் என்பதற் காகவே ஒருவருக்கு திறன் வழங்கப்பட்டிருக்கிறது. இது தான் இயற்கையின் சட்டம்.

ஆயிரம் கோடி இருக்கிறது என்பதற்காக அதை என் னால் சாப்பிட முடியாது. காலையில் மூன்று இட்லிக்கு மேல் சாப்பிட்டால் ஒன்று கொல்லைப்புறத்திற்கு ஓட

வேண்டும். இல்லையென்றால், மருத்துவமனைக்குச் செல்ல வேண்டும். ஆயிரம் கோடியை வைத்து நான் என்ன செய்ய முடியும். பணம்தான் நிறைய இருக்கி றதே என்பதற்காக ஆயிரம் ஏக்கரில் நூறு ஏசி போட் டுக்கொண்டா படுக்க முடியும். மிஞ்சிப்போனால் ஒரு அறையில் ஏசி வைத்துப் படுத்துக்கொள்ளலாம். ஒரு கார் வாங்கலாம். இன்னும் இரண்டுதான் இருக்கட் டுமே. அதில் என்ன தவறு என்ற எண்ணத்தில் நான்கு கார்கள் வரை வாங்கி சந்தோசப்பட்டுக்கொள்ளலாம். தேவையே இல்லாமல் நாலாயிரம் கார் வாங்கி வைத் துக்கொண்டு என்ன செய்வது?

அளவுக்கு அதிகமான செல்வம் உங்களுக்குக் கிடைத் திருக்கிறது. அதுவும் தர்மப்படி உங்களுக்குக் கிடைத்தி ருக்கிறது என்றால் மிகவும் நல்லதுதான். ஆனால் அது பெருக வேண்டும் என்றால் செலவளித்தே ஆகவேண் டும்.

இது என்ன புதுக்கதையாக இருக்கிறது. செலவளித் தால் எப்படி செல்வம் பெருகும்? சேர்த்து வைத்தால் தானே செல்வம் பெருகும் என்கிறீர்களா?

முன்பே கூறியது போல செலவின் நோக்கம்தான் செல் வத்தைப் பெருக்குகிறது. அதை வைத்திருக்கும் தகு தியை ஒருவருக்கு அளிக்கிறது.

அப்படியென்றால் என்னிடம் இருக்கும் திறனை, செல் வத்தை எப்படிச் செலவளித்துப் பெருக்குவது என்று கேட்கிறீர்களா?

உங்கள் செல்வத்தை வைத்து இந்த சிருஷ்டியைக் காப் பாற்ற வேண்டும். இந்த சிருஷ்டிக்கு என்ன நல்லது செய்யமுடியுமோ அதைச் செய்யவேண்டும்.

மாதக் கடைசி. பழனிச்சாமியிடம் கையில் வெறும் பத்து ரூபாய்தான் இருந்தது. இரவு உணவிற்கு என்ன செய்

வது என்று யோசித்துக்கொண்டே தெருவில் நடந்து சென்றான். முருகேசன் அண்ணாச்சி கடையைக் கடக்கும்போது அண்ணாச்சி யாரையோ திட்டுவதைக் கேட்டு நின்றவன் என்னவென்று பார்த்தான். அண்ணாச்சி ஒரு பிச்சைக்காரனை விரட்டிக்கொண்டிருந்தார்.

அவனைப் பார்க்க மிகவும் பரிதாபமாக இருந்தது பழனிச்சாமிக்கு. உடனே தன் பையில் இருந்த பத்து ரூபாயை எடுத்து பிச்சைக்காரனிடம் கொடுத்துவிட்டு வீட்டுக்கே திரும்பி வந்துவிட்டான்.

தண்ணீரைக் குடித்துவிட்டு தூங்கலாம் என்று நினைத்துக்கொண்டிருக்கும்போதே பழனிச்சாமியின் நண்பன் ஜான்பால் வீட்டுக் கதவைத் தட்டினான். கையில் பிரியாணி பார்சலோடு.

பழனிச்சாமி பிச்சைக்காரனுக்கு பத்து ரூபாயைப் போடும்போது எதிரே இருந்த முனியாண்டி விலாஸ் வாசலில் சாப்பிட்டு கைகழுவிக்கொண்டிருந்த ஜான்பாலுக்கு நண்பனை பிரியாணியுடன் சென்று ஆச்சர்யப் படுத்தவேண்டுமென்று தோன்றியிருக்கிறது. இதுதான் இயற்கையின் விளையாட்டு.

சிருஷ்டிக்குச் செலவளிப்பது தானமில்லை. உங்களுக்கு நீங்களே செய்துகொள்கிறீர்கள். எதையுமே நீங்கள் தானமாகக் கொடுக்க முடியாது. ஏன் என்றால் நீங்கள் இங்கே புதியதாக எதையும் உருவாக்கிவிடவில்லை. இங்கு எல்லாமே உங்களைச் சார்ந்துதான் நடக்கிறது. சிருஷ்டியில் கிடைக்கும் எதையெடுத்து எந்த உயிருக்குக் கொடுத்தாலும். அது சிருஷ்டிக்கே செய்வது. தனக்குச் செய்தவனுக்கு அதைவிட பல மடங்கு திரும்பக்கிடைக்கச் செய்வதே சிருஷ்டியில் லீலை.

உங்களிடம் ஆயிரம் கோடி இருக்கிறதென வைத்துக் கொள்ளுங்கள். அதில் ஒரு பத்து கோடி, சரி போனால் போகட்டும் ஒரு நூறு கோடியை உங்களுக்கென்று வைத்துக்கொள்ளுங்கள். மீதமிருக்கும் தொள்ளாயிரம் கோடியை இந்த சிருஷ்டியைக் காப்பாற்றுவதற்காகச் செலவிடுங்கள். அப்படிச் செய்த அடுத்த நொடி ஆயிரம் கோடி ஐயாயிரம் கோடியாக உங்களிடம் திரும்பி வரும். கேட்க அருணாசலம் திரைப்படம் மாதிரி இருக்கிறதல் லவா? செய்து பாருங்கள். திகைத்துப்போய் என்னைப் பார்க்க ஓடி வருவீர்கள்.

காரணம் எளிது, நீங்கள் இயற்கையோடு ஒத்திசைந்து செயல்படுகிறீர்கள்.

ஆஹா, ஐயாயிரம் கோடி வந்துவிட்டதே, கொஞ்சம் சேர்த்து வைத்துக்கொண்டால் என்ன தவறு என்று நினைத்து எட்டு, பத்து தலைமுறைக்கு அதை சேர்த்து வைக்கக் கூடாது. இந்த ஐயாயிரம் கோடியில் உங்க ளுக்குத் தேவையானதை எடுத்துக்கொண்டு மீண்டும் சிருஷ்டியைக் காப்பாற்ற செலவிட வேண்டும். அப் போது பத்தாயிரம் கோடியாக திரும்பி வரும். அப்படித் தான் உலக கோடீஸ்வரர்கள் உருவானார்கள். உரு வாக முடியும்.

இது செல்வத்திற்கு மட்டுமில்லை. எந்தவொரு விஷய மாக இருந்தாலும் சரி. இதுதான் கேம் ரூல்.

எனக்கு ஞானம் வந்துவிட்டது. நான் மட்டும் நன்றாக இருந்தால் போதுமா?

இந்த ஞானத்தை இயற்கை ஒருவருக்கு எதற்காகக் கொடுக்கிறது? அதை வைத்து முதலில் உன்னைக் காப்பாற்றிக்கொள். அதன் பிறகு இந்த சிருஷ்டியில் இருக்கக்கூடிய அத்தனை உயிர்களுக்கும் கொடுத்து அவற்றைக் காப்பாற்று என்பதற்காக.

இதைச் செய்யவில்லை என்றால் மொத்தமாக அது என்னை அழித்துவிடும். எனக்கு அது சொத்தாக மாறாது. என்னை அது அனுபவிக்கவே விடாது. என் ஞானத்தால் எனக்கே பயனில்லை என்றாகிவிடும்.

இதிலிருந்து அனைவரும் புரிந்துகொள்ளவேண்டியது என்னவென்றால், எப்போது கொடுக்கிறோமோ அப் போதுதான் அது சொத்தாக மாறும்.

உங்களுக்குப் புரியும்படியாக ஒரு சின்ன உதாரணம் சொல்கிறேன், சிறு வயதில் பள்ளிகூடத்தில் படித்தி ருப்பீர்கள். படிக்கும் காலத்தில் அறிவியல், வரலாறு, கணக்கு எல்லாம் ஒன்றும் புரியாது. ஏதோ கடமைக் குப் பரீட்சை எழுதி, பாஸ் ஆகியிருப்பீர்கள். இப் போது நீங்கள் பெரியவர்களாகிவிட்டீர்கள். உங்களுக் குக் குழந்தைகள் இருக்கும். உங்கள் குழந்தை நான் காம் வகுப்போ, ஐந்தாம் வகுப்போ படிக்கும். அதற்கு கணக்கோ, அறிவியலோ சொலிக்கொடுக்க வேண்டியி ருக்கும். நன்றாகச் சொல்லிக்கொடுக்க வேண்டும் என் பதற்காக அதே பாடங்களை மீண்டும் படிப்பீர்கள். இப் போது படிக்கும்போதுதான் உங்களுக்கு அந்தப் பாடத் தின் உண்மையான அர்த்தமே புரியும். சிறு வயதில் புரி யாத பாடங்கள் எல்லாம் இப்போது இவ்வளவுதானா என்று தோன்றும். மீண்டும் பள்ளிக்குச் சென்று படிக்க லாமோ என்ற ஆசைகூட ஏற்படும்.

எனக்கு இந்த ஞானம் வேண்டும் என்று நினைத்துப் படிக்கும்போது ஞானம் கிடைக்கவில்லை. மகனுக்கோ மகளுக்கோ இந்த ஞானத்தைக் கொடுக்க வேண்டும் என்று படிக்கும்போதுதான் உங்களுக்கு அந்த பாடத் தைப் பற்றிய புரிதலே வருகிறது.

இன்னொரு உயிருக்குத் தரவேண்டும் என்று நினைக் கும்போதுதான் நமக்கே முதலில் எதுவும் கிடைக்கும். இதுதான் இயற்கையின் சட்டம்.

அளவுக்கு அதிகமாக செல்வம் இருக்கிறது என்றால் அந்தச் செல்வத்தைக் கொடுத்து அடுத்தவரை உயர்த்த வேண்டும் என்று நினைக்கின்ற போதுதான் அந்த செல்வத்தின் சொத்தை ஒருவர் அனுபவிக்கவே முடியும். அதனுடைய பலன் அப்போதுதான் வந்து சேரும்.

எனக்கு வேண்டும் என்று எதை எடுத்து வைத்துக் கொண்டாலும் அது வெறுமேதான் இருக்குமே தவிர அனுபவிக்க முடியாது.

அதனால், எவ்வளவு கொடுக்க வேண்டும் என்பதில்லை. உங்களுக்குத் தேவையானதை வைத்துக் கொண்டு மீதம் இருக்கும் எல்லாவற்றையும் கொடுங்கள். இல்லை, உங்களால் அதைச் செய்ய முடியவில்லை என்றால் நன்றாக இதைச் செய்யக்கூடிய நபரிடமோ, நிறுவனத்திடமோ அல்லது அமைப்பிடமோ ஒப்படைத்துவிடுங்கள்.

எதுவாக இருந்தாலும் அது சிருஷ்டியைக் காப்பாற்றக் கூடிய செயலாக இருக்கவேண்டும் என்பதை மட்டும் உறுதிபடுத்திக்கொள்ளுங்கள்.

இதைச் செய்தால் இதுவே உங்களுக்குப் பெரிய சொத்தாக மாறும். உங்கள் சொத்து பெருகிக்கொண்டே போகும். பெருகப் பெருகக் கொடுத்துக்கொண்டே இருங்கள். கொடுக்கக் கொடுக்கப் பெருகிக்கொண்டே இருக்கும். இதுதான் இயற்கையின் சட்டம்.

உங்களுக்கு இன்னும் ஒரு உதாரணம் கொடுத்தால் உடனே புரிந்துகொள்வீர்கள். மதுரை சலூன் கடைக்காரர் மகள் நேத்ராவைப் பற்றி பத்திரிகைகளில் வாசித்திருப்பீர்கள். டிவியில் பார்த்திருப்பீர்கள். நடிகர்கள், முதல்வர், பிரதமர் துவங்கி ஐக்கிய நாடுகள் சபை வரை நேத்ராவைப் பாராட்டித் தீர்க்கிறார்கள். என்ன

செய்தாள் அந்தச் சின்னப் பெண். அப்பா சலூன் கடைக் காரர். மகளை ஐஏஎஸ் ஆக்கும் கனவிற்காக குருவி சேர்ப்பது போல ஐந்து லட்சம் ரூபாயை சேர்த்து வைத் திருந்தார். கொரோனா வந்தது. நாடடங்கு, ஊரடங்கு, வீடடங்கு. எங்கும் தொழில்களின் வீழ்ச்சி, வேலை யின்மை, வறுமை, பசியின் அலறல். நேத்ரா பார்த்தார். அத்தனை பணத்தையும் எடுத்து வறியோர்க்குச் செல வழித்தார். அச்சச்சோ ஐஏஎஸ் ஆவது? அது அப்புறம். முதலில் கண்ணுக்கு முன்னே நிற்கும் பசியைப் போக்கு வோம் என்றார். கையிருப்பு முழுக்கக் கரைந்தது. கலங் கவில்லை. மீண்டும் மீண்டும் ஓடி ஓடி உதவினார்.

இன்று பாருங்கள். உலகமே நேத்ராவை விரும்புகிறது. சமூகத்தின் அத்தனை ஊடகங்களும் பாராட்டிவிட்டன. அத்தனை பெரிய மனிதர்களும் நேத்ராவை வானளா வப் புகழ்கிறார்கள். திரை நட்சத்திரங்கள், விளையாட்டு வீரர்கள், அரசியலாளர்கள் புகழ்மாலை சூட்டினர். பலர் நேத்ராவை தங்கள் வீட்டுப் பிள்ளையாக நினைத்து மகிழ்ந்தனர். முதல்வர் அவரது படிப்புச் செலவை அரசு ஏற்கும் என்று அறிவித்தார். பிரதமர் பாராட்டினார். உச் சகட்டமாக ஐ. நா. நல்லெண்ணத் தூதர் அங்கீகாரமும் கிடைத்தது. இதுவெல்லாம் கிடைக்கும் என்பதற்காக அவர் ஐந்து லட்சத்தைச் செலவிடவில்லை. ஆனால், அவரது சிருஷ்டி திரும்பக் கொடுத்தவற்றை ஒருவரால் ஐயாயிரம் கோடி செலவு செய்தாலும் பெற முடியாது. பல லட்சக்கணக்கானவர்களின் மானசீக அன்பு நேத்ராவிற் குக் கிடைத்திருக்கிறதே. அது விலைமதிப்பில்லாதது. ஒருவேளை அந்த ஐந்து லட்சத்தைக் கொண்டு நேத்ரா ஐஏஎஸ் ஆகியிருந்தால்கூட இப்போது கிடைத்தவை அனைத்தும் அவருக்குக் கிடைத்திருக்கும் என்று சொல்ல முடியாது.

ஆக, இதுதான் சிருஷ்டியின் விதி, சட்டம்.

இந்த சட்டத்திற்குள் செயல்பட்டால் அத்தனை செல்வமும் வந்து சேரும். இல்லையென்றால் பணம் மட்டுமே இருக்கும். நேரம் இருக்காது. ஆரோக்கியம் இருக்காது. வீட்டில் நிம்மதி இருக்காது. ஏதோ ஒரு வழியில் உங்களை வருத்தி எடுத்து எதையும் அனுபவிக்க விடாது.

# கஷ்டப்படுவதில் டிகிரி வாங்குவது எப்படி?

**கேள்வி:** குரு, ரொம்ப கஷ்டப்பட்டு சம்பாதிக்கிறேன். ஆனாலும், பணக்காரன் ஆக முடியவில்லையே?

வாழ்த்துக்கள் சார். நீங்கள் கஷ்டப்படுவதற்கு என்றே நேர்ந்துவிடப்பட்டிருக்கிறீர்கள். அடி வாங்கி, அடி வாங்கி பழகிய பாரம் இழுக்கும் மாடு அடியைக்கூட ஒருவகை பாராட்டு என்று கருதிக்கொள்ளுமாம். நீங்கள் அவ் வகை ஆள்.

சிறுவயதிலிருந்து உங்களுக்குள் ஒரு நம்பிக்கையை வளர்த்திருப்பார்கள். கஷ்டபட்டு படிக்க வேண்டும். கஷ்டப்பட்டு வேலை பார்க்க வேண்டும். கஷ்டப்பட்டு கல்லூரிக்குப் போக வேண்டும். கஷ்டப்பட்டு வீடு கட்ட வேண்டும். கஷ்டப்பட்டு கல்யாணம் செய்ய வேண்டும். கஷ்டப்பட்டு சம்பாதிக்க வேண்டும். கஷ்டப்பட்டு பிள்ளைகளை வளர்க்க வேண்டும். கஷ்டப்பட்டால்தான் முன்னேற முடியும். இப்படிச் சொல்லிச் சொல்லி வளர்க்கப்பட்டிருக்கிறீர்கள். வாழ்க்கை என்றாலே கஷ்டம் என்ற தவறான சிந்தனை முறைக்குப் பழக்கப்படுத்தப் பட்டிருக்கிறீர்கள்.

அதனால், 'கஷ்டம்' என்ற வார்த்தையே உங்கள் வாழ்க்கை என்றாகிவிட்டது.

இதுவொரு தவறான அணுகுமுறை. மிகவும் துரதிர்ஷ்டவசமானது. உண்மையில், கஷ்டப்பட்டு எதையும் சாதிக்க முடியாது. கஷ்டப்பட்டு சாதிக்க நினைத்தால் களைப்புதான் மிஞ்சும். சாதனையாளர் ஆக முடியாது.

நம் சமுதாயம் எல்லாவற்றிற்கும் கஷ்டப்படச் சொல்லியே நம்மை பழக்கப்படுத்தியிருக்கிறது. உங்கள் தின

சரி வாழ்விலேயே, 'கஷ்டப்பட்டு உழைத்த காசுதான் தங்கும், கஷ்டப்படாமல் வந்த காசு காற்றில் போய்விடும்' எனச் சாதாரணமாக அனைவரும் சொல்வதைக் கேட்டிருப்பீர்கள்.

இந்தத் தவறான சிந்தனைப் பழக்கம் உங்கள் மனதில் ஆழமாக வேரூன்றியிருக்கிறது. அது வாழ்வின் அனைத்து விஷயங்களிலும் பிரதிபலிக்கிறது. பண விஷயத்தில் கஷ்டப்பட்டுதான் சம்பாதிக்க வேண்டும் என்று மனதில் நீங்கள் தீர்மானித்து வைத்திருக்கிறீர்கள். இது ஒரு மிகப்பெரிய குறைபாடு.

உண்மை என்னவென்றால் கஷ்டப்படாமல்தான் பணம் வரும். கஷ்டப்பட்டால் பணம் வராது. மிகவும் கஷ்டப்பட்டால் கொஞ்சமாக பணம் வரும். அதுவும்கூட போனால் போகட்டும் என்று பிரபஞ்சம் நமக்கு அளிக்கக்கூடிய சலுகையாக இருக்கும். அதுவே, கஷ்டப்படாமல் செய்தால் நிறைய பணம் வரும். எப்படி?

பொதுவாகவே, விரும்பிச் செய்யவேண்டிய எந்தவொரு செயலையும் விரும்பிச் செய் என்று நமக்கு யாரும் சொல்லித்தரவில்லை.

பரீட்சையில் அதிக மதிப்பெண்கள் பெற, கஷ்டப்பட்டுப் படிக்க வேண்டும். வேலைக்குச் சென்றால் கஷ்டப்பட்டு உழைக்க வேண்டும். தொழிலில் முன்னேற கஷ்டப்பட்டு உழைக்க வேண்டும். இப்படித்தான் சொல்லித்தரப்பட்டிருக்கிறதே தவிர, விருப்பத்தோடு வேலை செய், விரும்பியதைச் செய், குதூகலமாகப் படி என்று சொல்லித்தரவில்லை.

எந்தவொரு வேலையாக இருந்தாலும் எளிதாகச் செய்யலாம். ஆனால், அதை நீங்கள் விரும்பிச் செய்யவேண்டும். அத்துடன் அந்தச் செயல், அதன் மூலம் கிடைக்

கக்கூடிய பலனை மட்டும் நோக்கியதாகவும் இருக்கக் கூடாது.

நம்முடைய முக்கியமான பிரச்சினைகள் இரண்டு.

ஒன்று, கஷ்டப்பட்டுத்தான் எதையும் அடைய வேண் டும் என்கிற எண்ணம். இரண்டு, செய்யக்கூடிய செயல் அனைத்திலும் பலனை எதிர்பார்ப்பது.

இந்த இரு காரணங்களால்தான் உங்களுக்கு செல்வம் எளிதாக வருவதில்லை. எந்தக் கஷ்டமும் இல்லாமல் இயல்பாகச் செயல்படுபவர்களிடம் இந்த இரண்டுமே இருக்காது. அவர்களுக்கு செல்வம் எளிதாக வந்து கொண்டிருக்கும்.

அப்படி எளிதாக செல்வம் வருவதற்கு என்ன காரணம்?

இறைவன் ஒவ்வொரு உயிருக்குள்ளும் ஒரு நோக் கத்தை வைத்துதான் படைத்திருக்கிறார். எந்த நோக் கதிற்காக ஓர் உயிர் படைக்கப்பட்டிருக்கிறதோ, அந்த நோக்கத்துடன் ஒத்திசைந்து, இதற்காகத்தான் நான் படைக்கப்பட்டிருக்கிறேன் என்பதை உணர்ந்துவிட் டால் எல்லாமே எளிதாகிவிடும்.

அதற்கு உண்டான சூத்திரம், சக்தி, சூட்சுமம் எல்லா வற்றையுமே இறைவன் ஒவ்வொரு உயிருக்குள்ளும் வைத்துத்தான் படைத்திருக்கிறான். இதைச் சரியாக உணர்ந்துவிட்டீர்கள் என்றால் எதையுமே சிரமமின்றி எளிதாகச் செய்யலாம். ஏனென்றால், எதை உங்களால் எளிதாக இயல்பாகச் செய்ய முடிகிறதோ அதற்காகத் தான் நீங்கள் படைக்கப்பட்டிருக்கிறீர்கள். எதைச் செய் யும்போது இடம் மறந்து, பொருள் மறந்து, நேரம் மறந்து, பசி துறந்து, உங்கள் முழு ஆற்றலையும் குவித்து ஒன்றில் லயித்து ஈடுபட்டுச் செய்கிறீர்களோ அதுதான் உங்கள் சுதர்மம். அதைச் செய்யத்தான் இயற்கை உங்களைப் படைத்திருக்கிறது. நீங்கள் விரும்பியதைச் செய்கையில்

மிக மிக எளிதாக எவ்வித கஷ்டமும் படாமல் செல்வத்தைப் பெறலாம்.

இந்தப் பிரபஞ்சம் வெகு இயல்பாக இயங்கக்கூடியது. இயற்கையில் எதுவும் 'கஷ்டப்பட்டு' நடப்பதில்லை.

உதாரணமாக, ஒரு மாங்கொட்டையை எதற்காக இறைவன் படைத்திருக்கிறார். மாங்காயை உருவாக்குவதற்காக. ஒரு மாங்காயை உருவாக்குவதற்கான சூத்திரங்கள் அந்த மாங்கொட்டையில் இருக்கிறது. மாங்கொட்டையை மண்ணில் விதைத்து தண்ணீர் ஊற்றி வளர்க்கும்போது, அழகான மாமரம் வளர்ந்து சுவையான மாங்காயைத் தருகிறது. அதுபோல, ஒரு வேப்பங்கொட்டையில் வேப்பமரத்திற்கான சூத்திரம் இருக்கும்.

'என் பழத்தை யாருமே விரும்பிச் சாப்பிடுவதில்லை. அதனால், இனிமேல் நான் கஷ்டப்பட்டு மாம்பழத்தை உருவாக்கப் போகிறேன்' என்று வேப்பமரம் நினைத்தால் எப்படியிருக்கும்?

அப்படித்தான் இருக்கிறது இங்கு பலரின் செயல்பாடுகள். நாம் எதற்கு படைக்கப்பட்டிருக்கிறோம் என்ற உண்மையை உணராமல், யாரோ எதுவோ செய்கிறார்கள் என்று நாமும் செய்து அடிபட்டு அவஸ்தைப்படுகிறோம்.

ஒரு வேப்பமரம் மாம்பழத்தை எப்படி உருவாக்க முடியும்? எவ்வளவு கஷ்டப்பட்டாலும் நடக்காது. அடிப்படையில் அதற்கான மூலப்பொருளோ, சூத்திரமோ அதில் இல்லை. மாம்பழத்தை உருவாக்குவதற்காக வேப்பமரம் படைக்கப்படவில்லை. அதன் நோக்கம் அது கிடையாது.

அதுவே ஒரு மாமரம் வெகு எளிதாக, இயல்பாக மாம்பழத்தை உருவாக்கிவிடும். எந்தக் கஷ்டமும் படாது.

ஆனால், மாமரம் தேங்காயை உருவாக்க நினைத்தால்? முடியுமா? இதுதான் இயற்கையின் ரகசியம்.

இயற்கையைக் கூர்ந்து கவனித்துப் பாருங்கள். எல்லா விஷயமும் இயல்பாக எந்த விதமான கஷ்டமும் இல்லாமல் தானாகவே நடக்கின்றன.

ஒரு ரோஜாச் செடியை உங்கள் வீட்டில் நீங்கள் வளர்க்க வேண்டும் என்றால் என்னவெல்லாம் கஷ்டப்படுவீர்கள். சரியான மண் வேண்டும். அளவான உரம் வேண்டும், வெயில் அதிகம் இருந்தால் செடி கருகிவிடும், குறைவாக இருந்தால் செடி வளராது. மிதமான சரியான சூரிய வெளிச்சம் படும் இடத்தில் வைக்க வேண்டும். முறை வைத்து தண்ணீர் விடவேண்டும். இப்படி ஒவ்வொன்றையும் பார்த்துப் பார்த்து செய்தாலும் பூ மட்டும் பூக்கவே மாட்டேன் என்கிறது. அப்படியே பூத்தாலும் அதன் இயல்பான அளவில் பாதிதான் இருக்கும். எவ்வளவு கஷ்டபட்டாலும் ஒரு ரோஜாச் செடியை பூக்க வைக்க முடியவில்லையே என்று வருத்தப்படுவீர்கள்.

ஊட்டி, கொடைக்கானல் என்று மலைப்பிரதேசங்களுக்குப் போனால் தெருவோரங்களில் காட்டுச்செடி போல ரோஜாக்கள் பூத்து நிறைந்து கிடக்கும். அதைப் பராமரித்து நேரம் பார்த்து தண்ணீர் விட்டு உரம் வைத்தா வளர்க்கிறார்கள்? இல்லை, தானாக வளரும். காரணம் என்னவென்றால் ரோஜா வளர்வதற்கான சூழ்நிலை அங்கு இயல்பாகவே இருக்கிறது.

எப்போது ஒரு சரியான சூழ்நிலை உருவாகி அதற்கு உண்டான மூலம் சரியாக இயற்கையுடன் ஒத்திசைகிறதோ அப்போது அதன் படைப்பு மிகவும் எளிமையாகவும் இனிமையாகவும் இருக்கும்.

ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் இறைவன் ஒரு குறிப்பிட்ட சக்தியை, ஒரு சூத்திரத்தை வைத்திருக்கிறான்.

ஆனால், அந்தச் சூத்திரத்தை நீங்கள் பார்க்காததுதான் பிரச்சினை. உங்களுக்கான சூத்திரத்தை விட்டுவிட்டு ஆட்டுமந்தை போல எல்லாரும் ஒரே வேலையைச் செய்ய முற்படுவதனால் எல்லாமே கஷ்டமாகிவிடுகிறது.

மாம்பழம் எல்லாருக்கும் பிடித்திருக்கிறது என்பதற்காக காட்டில் இருக்கும் அத்தனை மரங்களும் மாம்பழத்தை உற்பத்தி செய்ய நினைத்தால் எப்படியிருக்கும்? மாமரம் மட்டும்தான் மாங்காயை உற்பத்தி செய்யமுடியும். மற்ற மரங்கள் எல்லாம் அதனதன் வேலைகளைத்தான் செய்யமுடியும். அதைத்தான் செய்கின்றன.

ஒரு சமுதாயத்தில் லட்சக்கணக்கான மக்கள் இருக்கிறோம். அனைவரும் ஒரே வேலையைச் செய்ய முற்பட்டால் என்ன நடக்கும்? இப்படித்தான் கஷ்டத்தில் சிக்கிக்கொள்கிறீர்கள். மற்றவர்களோடு உங்களை ஒப்பிட்டுக்கொண்டு உங்களை நீங்களே வருத்திக்கொள்வது வேப்பமரம் மாம்பழம் உருவாக்க நினைத்த கதைதான்.

அப்படியென்றால் நான் எதற்காகப் படைக்கப்பட்டிருக்கிறேன்?. என்னுடைய வேலையை, தொழிலை நான் பின்தொடர்ந்தால் எனக்கு வருமானம் கிடைக்குமா? என்ற கேள்வி எழுகிறதல்லவா?

எதுவுமே ஒரு நாளில் நடந்துவிடாது. அதற்கான இயல்பான நேரம் வரும்போது தானாக நடக்கும். ஒரு விதையை மண்ணில் விதைத்தால் உடனே முளைத்து மரமாகி மாம்பழம் தந்துவிடுகிறதா? இல்லையே. விதையை விதைத்து அதற்கு தண்ணீர் ஊற்றி, அது வளர்ந்து மரமாகி பழம் தருவதற்கு சில வருடங்கள் ஆகும் இல்லையா?

பொறுமையும் நிதானமும் விடாமுயற்சியும் இருக்க வேண்டும். முதலில் உங்கள் மேல் உங்களுக்கு நம்பிக்கை வரவேண்டும். நம்பிக்கை எப்போது ஏற்படும்?

உங்கள் திறனை நீங்களே கண்டுகொள்ளும்போதும் அதை வளர்த்தெடுக்கும்போதும் உருவாகும்.

ஒன்றைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள். ஒவ்வொரு உயிருக்கும் ஒரு தனித்தன்மை இருக்கிறது. அதை இயக்கும் ஒரு பிராண சக்தி இருக்கிறது. அந்தப் பிராண சக்திதான் அனைத்து செல்வங்களையும் சம்பாதித்துக் கொடுக்கிறது. இந்தப் பிராண சக்தியின் ஓட்டம் யாருக்கு நன்றாக இருக்கிறதோ அவருக்குத்தான் செல்வம் எளிதாகக் கிடைக்கிறது.

எல்லாருக்குள்ளும் இந்த பிராண சக்தி இருக்கிறதா என்று கேட்கிறீர்களா?

ஆம், கண்டிப்பாக இந்தப் பூமியில் பிறக்கும் அத்தனை உயிருக்குள்ளும் இந்தப் பிராண சக்தி இருக்கிறது.

அப்படியென்றால் ஏன் எல்லாரும் செல்வந்தர்களாக இல்லை?

அவர்களுடைய பிராண சக்தியின் ஓட்டம் தடை செய்யப்பட்டிருப்பதுதான் அதற்குக் காரணம்.

உங்களுக்குப் புரியும்படி எளிதாகச் சொல்கிறேன். முன்பே கூறியது போல ஒவ்வொரு உயிரும் ஒரு காரணத்திற்க்காக படைக்கப்பட்டிருக்கிறது. அந்தக் காரணத்தைக் கண்டுபிடித்து, அதில் உங்களுடைய உயிர்த் தன்மையைச் செலுத்தி, ஒரு காரியத்தைச் செய்யும் போது பிராண சக்தி தடையின்றி ஓடும். ஆனால், காரணத்தை விட்டுவிட்டு வேறு செயல்களில் நீங்கள் ஈடுபடும்போது சக்தியோட்டம் தடைபட்டுவிடும்.

படைக்கப்பட்ட காரணத்திற்காக ஒருவர் ஒரு செயலைச் செய்யும்போது இந்த சக்தியோட்டம் முழுவீச்சில் இயங்குகிறது. அப்படி இயங்கும்போது அதனுடைய உச்சத்தை நீங்கள் அடைய முடியும்.

அதுவே அனைத்து செல்வங்களையும் கொண்டுவந்து கொடுக்கும். உங்கள் பிராண சக்தி முழு வீச்சில் செயல் படும்போது செல்வத்தை நீங்கள் தேடிச் செல்ல வேண் டியதில்லை. செய்யவேண்டியதெல்லாம் இயல்பாக, சந் தோசமாக உங்கள் படைப்பின் காரணமான காரியத்தை செய்யவேண்டியது மட்டும்தான்.

உதாரணமாக, உங்களிடம் ஒரு பாட்டுக்கு இசைய மைக்கச் சொன்னால் உங்களால் முடியுமா? படாத பாடு பட்டாலும் முடியாது. ஆனால், இளையராஜாவிடமோ ரஹ்மானிடமோ சொன்னால் ஐந்தே நிமிடத்தில் செய்து முடித்து கையில் தந்துவிடுவார்கள். ஏன் ஏன்றால் அந்த உயிர் அதற்காகப் படைக்கப்பட்டிருக்கிறது. அவ்வுயி ரின் பிராண சக்தி தங்குதடையின்றி ஓடுகிறது.

ரஹ்மானிடம் கிரிக்கெட் விளையாடச் சொன்னால் அவ ரால் முடியுமா? அதே சச்சின் டெண்டுல்கரிடம் கிரிக் கெட் பேட்டைக் கொடுத்தால் போதும் அநாயாசமாக சதம் அடிப்பார். சச்சின் டெண்டுல்கரிடம் ஒரு கஜல் பாடலை உருவாக்கச் சொல்லுங்களேன். பேட்டை எடுத்துக்கொண்டு ஓடிவிடுவார்.

சச்சினுக்கு கிரிக்கெட் பேட் எடுக்கும்போதுதான் பிராண சக்தி முழு வீச்சில் செயல்படும். சச்சினை பாட் டுப் பாடச் சொன்னால் பிராண சக்தி ஓட்டம் இருக்காது. இளையராஜாவிற்கும் ரஹ்மானிற்கும் இசையமைக்கும் போதுதான் பிராண சக்தி முழு வீச்சில் செயல்படும்.

அடுத்து, பலனை மட்டுமே எதிர்பார்த்து செயல்க ளைச் செய்வது. அதாவது ஒன்றைச் செய்வதனால் எனக்கு என்ன பலன் கிடைக்கும் என்ற நோக்கத்து டன் செயல்படுவது. அப்படிச் செய்யும்போது செயல்திற னைத் தொலைத்துவிடுகிறீர்கள்.

கீதையின் மூலம் கிருஷ்ணர் இந்த உலகிற்குச் சொன்னது இதைத்தான். 'கடமையைச் செய், பலனை எதிர்பார்க்காதே'. நமக்கு என்ன கிடைக்கிறது என்று எதிர்பார்க்காமல், நாம் என்ன கொடுக்கிறோம் என்பதில் கவனமாக இருக்கவேண்டும்.

தினமும் சூரியன் உதிக்கிறது. உலக மக்களுக்கு வெளிச்சம் கொடுத்தால் எனக்கு ஏதாவது திரும்பக் கிடக்கும் என்று பலனை எதிர்பார்த்தா சூரியன் உதிக்கிறது? அது தன் கடமையைச் செய்கிறது.

மாம்பழம் கொடுப்பதில்தான் மாமரம் கவனமாக இருக்கிறது. நான் உனக்கு மாம்பழம் கொடுத்தால் நீ எனக்கு தண்ணீர் தருவாயா, உரம் தருவாயா என்றா கேட்கிறது?

ஒரு செயலைச் செய்யும்போது இதற்காக நான் படைக்கப்பட்டிருக்கிறேன். இந்தச் செயலை நான் சிறப்பாகச் செய்து கொடுக்க வேண்டும் என்பதில்தான் கவனம் இருக்கவேண்டும். "One should always focus on the process not on the end result".

அப்படியில்லாமல் உங்கள் கவனம் கிடைக்ககூடிய பலனில் இருக்கும்போது உங்கள் செயல்திறனை, ஸ்டைலை, கலைநயத்தை இழந்துவிடுகிறீர்கள். அதனால், அனைத்தையும் இழந்துவிடுகிறீர்கள்.

உங்கள் கவனம் செய்யக்கூடிய செயலில் இருக்கவேண்டும். அதை நோக்கிய படிநிலைகளில் கவனம் இருக்கவேண்டும். செயலின் பிரதிபலனில் இருக்கக்கூடாது. கைம்மாறு வேண்டா கடப்பாடு என்பது அதுதான்.

முதலில் கஷ்டப்பட்டுதான் எதையும் அடைய முடியும் என்கிற முன்தீர்மானத்தைக் கைவிட வேண்டும். உங்கள் படைப்பின் காரணத்தை அறிந்து, அந்தச் செயலில் ஈடுபட வேண்டும். அப்போதும்கூட கிடைக்கக்கூ

டிய பலனை எதிர்பார்க்காமல், செய்யும் செயலில் கவன மாக இருக்கவேண்டும்.

அப்போது எந்த வேலையும் செயலும் உங்களுக்குக் கஷ்டமாகத் தெரியாது. நீங்கள் ஒரு விற்பனைப் பிர திநிதி என்று வையுங்கள். அன்று நீங்கள் சந்தித் தாகவேண்டியவர்களை எல்லாம் சந்தித்து, நிறுவனத் தயாரிப்புகளுக்கு நேரடி டெமோ காட்டிவிட்டு, மேலா ளருக்கு அறிக்கையும் தாக்கல் செய்துவிட்டு, வீட்டுக் குத் திரும்புகிறீர்கள். நேரமோ இரவு ஏழு மணி. உங் கள் மேலாளர் திரும்ப அழைத்து, ஐந்து கிலோமீட் டர் தொலைவில் உள்ள இன்னொரு வாடிக்கையாள ரைச் சந்திக்கச் சொல்கிறார். உங்கள் மனநிலை எப் படி இருக்கும்? மேலாளருக்குப் பதில் உங்கள் காதலி அழைக்கிறார். பதினைந்து கிலோமீட்டர் தூரத்தில் ஒரு பேருந்து நிறுத்தத்தில் காத்திருக்கிறேன். வா, இரவுக் காட்சி சினிமாவிற்குப் போகலாம் என்கிறார். உங்கள் மனநிலை எப்படி இருக்கும்? முன்னது கஷ்டம், பின்னது இஷ்டம்.

கஷ்டப்பட்டு ஒன்றைச் செய்வதாகச் சொன்னாலே அங்கே ஒரு எதிர்ப்பு இருக்கிறது என்று அர்த்தம். அது உங்களுக்கானது இல்லை. அதற்காக நீங்கள் படைக் கப்படவில்லை என்று எளிதாகப் புரிந்துகொள்ளலாம். அது போன்ற செயல்களால் செல்வம் கிடைக்காது களைப்புதான் வரும்.

உங்கள் வேலையையோ அல்லது தொழிலையோ தேர்ந்தெடுக்கும்போது பாதுகாப்பு அல்லது நிலையான வருமானம் என்கிற அடிப்படையில் தேர்ந்தெடுத்தீர்கள் என்றால் செல்வம் எப்படி எளிதாக வரும்?

நீங்கள் பணம் இருந்தால்தான் பாதுகாப்பு என்ற எண் ணத்தில் பணத்திற்குப் பின்னால் ஓடுகிறீர்கள். பணம்,

பணம் என்று செல்லும்போது அது இல்லையென்றால் பயத்தை உருவாக்குகிறது.

பாதுகாப்பிற்குப் பின்னால் செல்லாமல் உண்மையை நோக்கிச் செல்லுங்கள். அது அனைத்தையும் எளிதாகக் கொண்டுவந்து சேர்க்கும்.

மூளை சொல்வதைக் கேட்காதீர்கள். இதயத்தைக் கேளுங்கள். இதயம் ஒருபோதும் தவறான பாதைக்குக் கொண்டு செல்லாது.

இந்த மண்ணில் பிறக்கும் அத்தனை உயிரும் பொக்கிஷங்கள்தான். உயிர்களில் எந்த ஏற்றத்தாழ்வும் இல்லை. இயற்கையின் படைப்புகள் அத்தனையும் ஒரு காரணத்திற்காகத்தான் படைக்கப்பட்டிருக்கின்றன. இறைவனால் படைக்கப்பட்ட அத்தனை உயிர்களும் வைரங்கள்தான்.

ஆனால், நீங்கள் வைரம் என்பது உங்களுக்குத் தெரியவில்லை. ஆகவே, ஒரு பாறைக்கல்லைப் போல சம்மட்டி அடியைத் தாங்கிக்கொள்கிறீர்கள். அதை நீங்கள் கண்டுபிடித்துச் செயல்படவேண்டும்.

எப்படி என் படைப்பின் நோக்கத்தை நான் கண்டுபிடிப்பது?

அதற்குப் பல சூட்சுமங்கள் இருக்கின்றன. முதலில் உங்களை உள்ளே ஆழ்ந்து பார்க்கவேண்டும். உங்களுக்குள்ளேயே அதை அறியும் சக்தி இருக்கிறது. அதைச் சரியாகக் கண்டுபிடித்து சூட்சுமத்தைப் புரிந்துகொள்ள வேண்டும்.

நீங்கள் படைக்கப்பட்ட நோக்கத்தை மட்டும் தெரிந்துகொண்டீர்கள் என்றால் எந்தக் கஷ்டமும் படாமல் எளிதாக செல்வத்தைப் பெறலாம். அதுவே உங்களைத் தேடி வரும்.

# சம்பாத்தியமும் உடைமைகளும்

**கேள்வி:** குரு, நிறைய சம்பாதிக்கிறேன். ஒவ்வொரு மாதமும் லட்சக்கணக்கில் வருமானம் வருகிறது. ஆனால், சொத்து மட்டும் சேர்க்கவே முடியவில்லை. என்னைவிட குறைவாக, மாதம் இருபதாயிரம், முப்ப தாயிரம் மட்டுமே சம்பாதிப்பவர்கள் எல்லாம்கூட வீடு, நகை, பங்களா என நிறைய சொத்து சேர்த்துக் கொண்டே போகிறார்களே, இது எப்படி குரு? நான் என்ன தவறு செய்கிறேன்?

பணத்தைச் சம்பாதிப்பது. சம்பாதித்த பணத்தைக் கொண்டு சொத்து சேர்ப்பது. இந்த இரண்டும் வெவ் வெறு விதமான திறமைகள்.

நீங்கள் ஏதோ ஒரு வேலை செய்கிறீர்கள், வேலை யில் மிகத் திறமையானவராக இருக்கிறீர்கள். தொழில் வளர்கிறது. முதலாளி நிறைய சம்பளம் தருகிறார். உங் களுக்கு நிறைய வருமானம் வருகிறது. பணத்தை சம் பாதிப்பது ஒரு கலை என்றால் சம்பாதித்த பணத்தை எப்படி சொத்தாக மாற்றுவது என்பது மற்றொரு கலை. இரண்டில் ஒன்றுதான் தெரியும் என்பது பாதி கிணறு தாண்டிய கதைதான்.

இந்த இரண்டுமே இரண்டு விதமான விஷயங்கள். செல் வம் ஒருவர் வாழ்வில் சேரவேண்டும் என்றால் அதற்கு நிறைய கோட்பாடுகள் இருக்கின்றன.

இது ஒரு மனநிலை. செல்வத்திற்கும் வங்கியில் சேமித் திருக்கும் பணத்திற்கும் சம்பந்தமில்லை. அது உங்கள் மனம் சம்பந்தப்பட்ட விஷயம். நீங்கள் பெரிய பணக்கா ரர் ஆகவேண்டும், நிறைய சொத்து உங்களுக்கு வேண் டும் என்றால் முதலில் உங்கள் மனம் சரியான நிலைக்கு வரவேண்டும். 'A wealthy mind will have tremendous

wealth. A poor mind will not have any wealth.' அதாவது, 'Rich man's mind, Poor man's mind' என்று ஆங்கிலத்தில் ஒரு பரவலான கூற்று உண்டு. முட்களின் மத்தியில் இருக்கும் அழகிய ரோஜாவைப் பார்ப்பது பணக்காரரின் மனம் என்றால் ரோஜாவை சுற்றி இத்தனை முட்கள் இருக்கிறதே என்று நினைப்பது ஏழையின் மனம். இது தான் வித்தியாசம்.

மனம் உயர்ந்த சிந்தனைகளுடன் மிகுந்த சக்தி வாய்ந்ததாக இருக்கவேண்டும். அப்படி இருந்தால்தான் செல்வம் வரும், சொத்து சேரும்.

இதில் முக்கியமாக கவனிக்கவேண்டிய மற்றொரு விஷயம். முதலில் சொத்து என்பது என்னவென்றே பலருக்குத் தெரியவில்லை. சொத்து என்பது உங்களுக்குள் இருக்கக்கூடிய ஒரு பிராண சக்தியின் ஓட்டம். அதாவது, நீங்கள் என்ன சேவை கொடுக்கப்போகிறீர்களோ, எதைச் செய்யப் பிறந்திருக்கிறீர்களோ அதுதான் உங்களின் உண்மையான சொத்து.

பணம் மிதமிஞ்சி வருகிறது. அதை எப்படிச் சொத்தாக மாற்றுவது? உங்கள் வருமானம் குறைவாக இருந்தாலும் வரக்கூடிய வருமானத்தையே சொத்தாக மாற்றலாம்.

இருபதாயிரம் சம்பளம் வரும்போது நீங்கள் என்ன செய்வீர்கள்? ஒரு சாதாரண மாருதி கார் வாங்குவீர்கள். அதற்கு மாதம் ஒரு ஐயாயிரம் தவணை கட்டுவீர்கள். வருமானம் கூடும். அறுபதாயிரம் எழுபதாயிரம் என்று வரத் தொடங்கும். அப்போது மாருதி காரை விற்றுவிட்டு பதினைந்து லட்சத்தில் ஒரு கார் வாங்குவீர்கள். இப்போது மாதம் ஐயாயிரம் தவணை செலுத்திய இடத்தில், மாதம் இருபதாயிரம் செலுத்துவீர்கள்.

எவ்வளவு வருமானம் வருகிறதோ அதற்கு இணையாக சொத்து வாங்குகிறீர்கள். ஆனால், ஒன்றை கவனிக்க மறந்துவிடுகிறீர்கள்.

கார் வாங்கும்போது உங்களுக்கு ஒரு சொத்து வருவது என்னவோ உண்மைதான். ஆனால், அந்தச் சொத்து மூலமாக உங்கள் பணம் வெளியில் செல்கிறது. ஒரு முறை மட்டுமல்ல, அன்றாடம். வாரம்தோறும். மாதம் தோறும். எரிபொருள், பராமரிப்பு என்று தொடர்ச்சியாக. இது ஒரு நிலை.

மற்றொரு நிலை என்னவென்றால், ஒரு வீடு வாங்க லாமா என்று நினைப்பீர்கள். நினைத்தவுடனே, ஆஹா! இரண்டு கோடிக்கு வீடு வாங்குவதா? அந்தப் பணத்தை தொழிலில் முதலீடு செய்தால் மாதம் மூன்று நான்கு லட் சம் வருமானம் கிடைக்குமே என்று கணக்குப் போடு வீர்கள். இங்குதான் தவறு நடக்கிறது. சொத்துக்களால் வருமானம் வராது என்று நினைக்கிறீர்கள்.

யதார்த்தத்தில் இது உண்மையல்ல. சொத்துக்களும் வருமானத்தைத் தரக்கூடியது. 'The more you try to accumulate wealth which can generate more wealth.'

ஒரு சொத்து வாங்கும்போது அந்தச் சொத்தும் ஒரு வருமானத்தைக் கொடுக்கக்கூடியதா என்று பார்க்க வேண்டும். நீங்கள் வாங்கும் சொத்துக்கள் அனைத்தும் மேற்கொண்டு சொத்தை உருவாக்கக்கூடிய நிலையில் இருக்கவேண்டும். அவ்வளவுதான்.

அந்தக் காலத்தில் செட்டியார் கணக்கு என்று சொல் வார்கள், கேள்விப்பட்டிருக்கிறீர்களா?

வட இந்தியாவின் மார்வாடி சமுதாயத்தைப் போல தமிழ் நாட்டில் நாட்டுக்கோட்டை செட்டியார் சமுதாயம் இருக் கிறது. அவர்களிடம் நிறைய சொத்து இருக்கும். அவர்க ளால் மட்டும் எப்படி நிறைய சொத்து சம்பாதிக்க முடிகி

றது? கொஞ்சம் கவனித்துப் பார்த்தாலே போதும் அந்தச் சூத்திரம் உங்களுக்குப் புரிந்துவிடும்.

மிக எளிதான சூத்திரம். அவர்கள் எந்தச் சொத்து வாங் கினாலும் அந்தச் சொத்திலிருந்து 6% வட்டி கிடைக் குமா என்று கணக்குப் பார்த்துதான் வாங்குவார்கள். 6% என்பது அரை சதவீத வட்டி.

ஒரு செட்டியார் சொத்து வாங்கினால் சும்மா வாங்கமாட் டார். ஐம்பது லட்ச ரூபாய்க்கு ஒரு சிறிய வீடு வாங்கலாம் என்று முடிவு எடுத்தால், அதிலிருந்து குறைந்தபட்சம் 6% வருமானம் கிடைக்குமா என்று பார்ப்பார். அப்படி வரு மானம் வரக்கூடிய சொத்துக்களைத்தான் வாங்குவார்.

இது ஒரு கோட்பாடு. இந்தக் கோட்பாட்டைக் கடைபி டித்து சொத்து வாங்கும்போது. ஐம்பது லட்சம் செலவு செய்து வாங்கிய சொத்திலிருந்து மாதாமாதம் ஒரு வரு மானம் வந்துகொண்டே இருக்கும். அந்த வருமானங் களை வைத்து, இன்னொரு சொத்து வாங்குவார்கள். அதுவும் 6% வட்டி கொடுக்கும். இப்படி வாங்கக்கூடிய ஒவ்வொரு சொத்தும் மேலும் வருமானத்தைத் தரும் போது சொத்துக்கள் பெருகிக்கொண்டே போகும். நாம் உறங்கும்போதும் நம்முடைய பணம் நமக்காக நடக்க வேண்டும் என்பதுதான் சொத்துக்களைப் பெருக்கும் தாரக மந்திரம்.

சொத்து சேர்ப்பதில் முக்கியமான பல கோட்பாடுகள் இருக்கின்றன. இதை அனைவரும் கற்றுக்கொள்ள வேண்டும்.

1) பணம் சம்பாதிப்பது எப்படி? சம்பாதித்த பணத்தைச் சொத்தாக மாற்றி, அதிலிருந்து மீண்டும் எப்படி வருமா னம் உருவாக்குவது? இந்த இரண்டு கலையையும் கற்ற வர்களால்தான் சொத்து சேர்க்க முடியும்.

2) சிலருக்கு நிறைய சொத்துக்கள் இருக்கும். ஆனால், வருமானமே இருக்காது. நிறைய பேருக்கு வருமானம் இருக்கும், ஆனால், சொத்துக்கள் இருக்காது. இரண்டுமே பிரச்சினைதான். இப்படிப்பட்டவர்கள் ஓடிக் கொண்டே இருக்கவேண்டும். ஆள் நின்றுவிட்டால் வருமானமும் நின்றுவிடும்.

3) சிலருக்கு பணம் நிறைய இருக்கும். ஆனால், நேரம் இருக்காது. அதனால் சம்பாதித்த பணத்தை அனுபவிக்க முடியாமல் போய்விடும். பணத்தினால் உருவாக வேண்டிய இன்பத்திற்குப் பதிலாக துன்பமே எஞ்சும்.

4) பணம் சம்பாதித்தால் மட்டும் போதாது. அதை முறையாக உபயோகிக்க வேண்டும். அதாவது 'Application of funds' என்று சொல்வார்கள். சரியான இடத்தில் சரியான முறைப்படி செய்யவேண்டும்.

5) இதில் மனநிலை என்பது மிக முக்கியமானது. உங்களுடைய சிந்தனைகளின் செயல்முறை என்ன? உணர்வுகள் என்ன? இதையும் கவனிக்க வேண்டும். சொத்து சேர்ப்பதற்கும் உணர்வுகளுக்கும் என்ன சம்பந்தம்?

உங்களுடைய எண்ணம், சொல், செயல், சுவாசம் மற்றும் இந்தப் பிரபஞ்சம்- இவை எல்லாம் ஒன்றோடு ஒன்று தொடர்புடையவை. இந்தத் தொடர்பு சரியாக இருந்து, அதற்கான திறமையும் உங்களுக்கு வந்துவிட்டது என்றால் எல்லாமே கிடைக்கும்.

இந்த இரண்டு விஷயத்தைப் புரிந்துகொண்டால், கொஞ்சம் பணம் இருந்தாலும் போதும் மிகப் பெரிய சாம்ராஜ்யத்தை நீங்கள் உருவாக்கிவிடலாம்.

# அதிர்வும் அல்கெமி வகுப்பும்

நண்பர்களே, வாழ்வில் வெற்றியடைவது எப்படி? நிறைய பணம் சம்பாதிப்பது எப்படி? எப்போதும் மகிழ்ச் சியாக இருப்பது எப்படி? இந்த உலகிலேயே மிகப் பெரிய பணக்காரனாவது எப்படி? இந்த உலகிலேயே பெரும் அதிகாரம் கொண்டவராவது எப்படி? புகழ் உடையவரா வது எப்படி?

இப்படி பல கேள்விகளுடன் மக்கள் என்னை தின மும் சந்தித்துக்கொண்டேதான் இருக்கிறார்கள். உண் மையில் அவர்களைப் பார்த்து நான் சிரித்திருக்கிறேன். இவை அனைத்தும் இயல்பானது. இது எதுவும் தேடிச் சென்று அடையக்கூடியது இல்லை. பிறப்பிலிருந்தே உங்களுக்குள் இயல்பாக இருப்பது.

தனித்துவமான புகழ், திறமை, அதிகாரம், ஆரோக்கியம் அனைத்தும் பிறக்கும்போதே உங்களுக்குள் இருக்கி றது. அதைச் தேடிச்சென்று அடையவேண்டியதில்லை.

ஐயோ, அனைத்தையும் நான் இழந்துவிட்டேனா என்று கேட்கிறீர்களா?

இல்லை, எதையும் நீங்கள் இழக்கவில்லை.

நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள். நீங்கள் எதையும் தேடிச்செல்ல வேண்டியதில்லை. அத்தனையும் இயல் பாக உங்களுக்குள் இருக்கிறது. அதிகாரம் வேண்டுமா? இயல்பாகப் பெறலாம். செல்வம், ஆரோக்கியம், புகழ் எதுவாக இருந்தாலும் அதை இயல்பாக அடையக்கூடிய சக்தி உங்களுக்குள்ளேயே இருக்கிறது.

வாழ்வில் அனைத்தையும் அடையவேண்டுமென்றால் உங்கள் அதிர்வுகளுடன் சரியாக பொருந்தியிருக்க வேண்டும். அவ்வளவுதான்.

அப்படியென்றால் ஏன் இது மிகவும் கடினமானதாக மாறியது என்கிறீர்களா?

ஏனென்றால், உங்கள் அதிர்வலைகளின் (Frequency) தொடர்பை நீங்கள் இழந்துவிட்டீர்கள். அதனால்தான் இந்தக் கேள்வி என்னிடம் திரும்பத் திரும்ப வந்து கொண்டிருக்கிறது.

இந்த அதிர்வலைகளுடன் மீண்டும் தொடர்பில் வருவது எப்படி?

இதில் இரண்டு முக்கியக் கூறுகள் இருக்கின்றன. ஒன்று உடல், மற்றொன்று மனம்.

உங்கள் உடலும் மனமும் சரியான அதிர்வுகளுடன் பொருந்தியிருக்க வேண்டும். உடலும் மனமும் இந்தப் பிரபஞ்சத்தோடு இணையும்போது ஒரு தனித்துவமான கருவியாக மாறிவிடுகிறது. அப்போது உங்கள் பிராண சக்தி உச்சத்தில் செயல்படுகிறது. அப்படிச் செயல்படும் போது இந்த உலகில் உள்ள அனைத்தையும் எளிதாகப் பெறுகிறீர்கள்.

தண்டவாளத்தின் ஒருபுறம் உங்கள் மனம் எனும் சக்கரம், மறுபுறம் உங்கள் உடல் எனும் சக்கரம். இந்த இரண்டும் நேர்கோட்டில் இருந்தால்தான் வாழ்வெனும் ரயில் அதன் இலக்கை அடைய முடியும். தண்டவாளத்தில் ஒன்று அதன் கோட்டை விட்டு விலகினாலும் போதும், ரயில் முன் நகர முடியாமல் அங்கேயே நின்றுவிடும்.

உடலையும் மனதையும் நேர்கோட்டில் கொண்டுவருவது எப்படி? பிரபஞ்சத்தோடு என் அதிர்வலைகளை சரியாக பொருத்திக்கொள்வது எப்படி?

உங்களுக்குப் புரியும்படியாக அதன் அடிப்படையை எளிதாகச் சொல்கிறேன்.

உடல் என்பது நிலம், நீர், நெருப்பு, காற்று மற்றும் ஆகாயம் எனும் பஞ்ச பூதங்களின் கலவை. இந்த ஐந்து கூறுகளுடனும் உடலானது சரியான சமநிலையில் பொருந்தியிருக்க வேண்டும். உங்கள் அதிர்வலைகளோடு சரியான கோட்டில் பொருந்தியிருக்கும்போதுதான் பிராண சக்தி உச்சத்தில் செயல்படும்.

நீங்கள் உண்ணும் உணவு நிலத்திலிருந்து கிடைக்கிறது. பிறக்கும்போது வெறும் அரையடி இருக்கும் உடல் நிலத்திலிருந்து கிடைக்கும் பழம், காய்கறிகளைச் சாப்பிட்டு ஐந்தடிக்கு மேல் வளர்கிறது.

நிலத்தை வெறும் மண்தானே என்று நினைக்கிறீர்கள் இல்லையா? ஆனால், அந்த மண் உங்கள் உடலில் மிக முக்கியமான பங்கு வகிக்கிறது. நிலம்தான் உடல் என்னும் அதிநவீன சாதனத்தை உங்களுக்கு வழங்கியிருக்கிறது.

உடலான இந்த நிலத்தோடு உங்கள் அதிர்வலைகள் பொருந்தாமல் விலகியிருக்கும்போது அனைத்து உடல் பிரச்சினைகளும் வரத் தொடங்குகிறது. உடல் எடை அதிகரிக்கிறது அல்லது குறைகிறது. நோய்கள் உருவாகின்றன.

உங்கள் உடல்நிலை நோயில்லாமல் அருமையானதாக இருக்கவேண்டும் என்றால் நிலத்தோடு உங்கள் உடலின் அதிர்வலைகளைச் சரியாகப் பொருத்தி சமநிலையில் வைத்துக்கொள்ள வேண்டியது கட்டாயம்.

அதேபோல மனமும் அதன் கூறுகளோடு சரியாகப் பொருந்திவிட்டது என்றால் அனைத்து செல்வங்களையும் எளிதாகப் பெறுவீர்கள். எதன் பின்னாலும் நீங்கள் ஓடவேண்டிய அவசியமில்லை. அனைத்தும் அதனதன் இடத்தில் சரியாக வந்து அமைந்துவிடும்.

நினைவிருக்கட்டும். ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு தனித்துவமான அதிர்வலை இருக்கிறது.

உதாரணமாக, ஒரு கிரிக்கெட் வீரரின் மனம் சரியான அதிர்வலையோடு பொருந்தும்போது அவரது திறமை உச்சத்தில் இருக்கும். அதன் மூலம் அவர் பேர், புகழ், பணம், அதிகாரம், அங்கீகாரம், சந்தோசம் என அனைத்துச் செல்வங்களையும் எளிதாக அடைவார்.

ஒரு தொழிலதிபருடைய உடலும் மனமும் அதன் அதிர்வுகளோடு சரியாகப் பொருந்தும்போது அனைத்து செல்வங்களும் அவர் செய்யும் தொழில் மூலமாகவே அவருக்குக் கிடைத்துவிடும்.

இப்படி ஒவ்வொருவருக்கும் அவருக்கான தனித்துவ மான அதிர்வலைகள் இருக்கும். அதனுடன் சரியாக அவர்களை இணைத்துக்கொண்டால் போதும். பணம், பேர், புகழ், நிம்மதி, சந்தோசம் என வாழ்வின் அத்தனை சொத்துகளையும் இயல்பாகப் பெறலாம். வாழ்கை மிக எளிதாக மாறிவிடும்.

என்னிடம் இந்தக் கேள்விகளோடு வருபவர்களுக்கு நான் மீண்டும் மீண்டும் சொல்லக்கூடியது ஒன்றேதான். எண்ணங்களைத் தெளிவானதாக, நேர்மறையானதாக வைத்துக்கொள்ளுங்கள். உங்கள் போட்டியாளர் வளர் கிறார், நிறைய சம்பாதிக்கிறார் என்றவுடன் பொறா மையோ வருத்தமோ அடைந்தீர்கள் என்றால் உங்க ளுக்கு வரவேண்டிய செல்வம் தடைபட்டுவிடும்.

உங்கள் போட்டியாளரைப் பாராட்ட முடியவில்லை, அவருக்காக மகிழ்ச்சியடைய முடியவில்லை என்றால் உங்கள் அதிர்வலைகளோடு பொருந்தியிருக்க முடியா மல் விட்டு விலகிச் சென்றுவிடுகிறீர்கள்.

ஆயிரத்து ஒன்றாவது தடவையாகச் சொல்கிறேன் நண் பர்களே... இந்தப் பிரபஞ்சம் ஒன்றோடு ஒன்று தொடர்

புடையது. மற்றவர் வளர்ச்சியைப் பார்த்து வருத்தப்படும் போது அது உங்களையும் சேர்த்தே பாதிக்கிறது. இந்த எதிர்மறை உணர்வுகள் மூலமாக உங்கள் செல்வத்தை நீங்களே தடை செய்துவிடுகிறீர்கள். முதல் அத்தியாயத்தில் சொன்ன தேவதைக் கதையை எப்போதும் மனதில் நினைவுபடுத்திக்கொள்ளுங்கள்.

உங்கள் மனதையும் எண்ணங்களையும் எந்தச் சூழ்நிலையிலும் நேர்மறையானதாகவே வைத்துக்கொள்ளப் பழகுங்கள். உடலும் மனமும் உங்கள் பிராண சக்தியோடும் இந்தப் பிரபஞ்சத்தோடும் சரியாக இணைந்திருக்கும்போது நீங்கள் உச்சகட்ட சக்தியைப் பெறுகிறீர்கள்.

இந்த அதிர்வலைகளுடன் எப்படி என்னைச் சரியாகப் பொருத்திக்கொள்வது என்கிறீர்களா?

அதற்குச் சில வழிமுறைகள் இருக்கின்றன.

இதைத்தான் நம் அல்கெமி பயிற்சியில் தெளிவாக, அனுபவப்பூர்வமாகக் கற்றுத்தருகிறோம்.

பல்லாயிரக்கணக்கான மக்கள் அல்கெமியில் இணைந்து தங்கள் உடலை, மனதை பிரபஞ்சத்தோடு சரியாக இணைத்துக்கொண்டு சமநிலை பெற்றிருக்கிறார்கள். சர்க்கரை நோய், கொழுப்பு, இரத்த அழுத்தம் போன்ற பல நோய்களிலிருந்து விடுபட்டிருக்கிறார்கள்.

இதற்கு வயதோ, தொழிலோ எதுவும் ஒரு பொருட்டல்ல. எந்த வயதிலும், யாராக இருந்தாலும் உங்களை சமநிலைப்படுத்திக்கொள்ளலாம். பள்ளிக் குழந்தைகள், கல்லூரி மாணவர்கள், தொழில் செய்பவர்கள், வேலைக்குச் செல்பவர்கள், வீட்டில் இருக்கும் பெண்கள்- இப்படி யார் வேண்டுமானாலும் இதில் இணைந்து பயனடையலாம். எந்தவொரு மதத்தையும் சடங்குகளையும் முன்னிறுத்தும் பயிற்சி அல்ல. எம்மதத்தவரும் எந்நாட்டினரும் எளிதாக இந்தப் பயிற்சிகளைப்

பெற்று வாழ்வில் விரும்பிய அனைத்து செல்வங்களை யும் அடைய முடியும்.

ஒருமுறை உங்கள் உடல் அதன் கூறுகளோடு சரியாகப் பொருந்திவிட்டால் அதன்பிறகு எந்த நோயும் உங்களை நெருங்காது. வாழ்நாளில் ஒரு தலைவலியோ காய்ச் சலோ கூட உங்களைத் தொடாது.

கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். உங்கள் உடலை எந் தவிதமான நோய்களும் அண்டாமல், உங்கள் மனதில் எந்தவிதமான அழுத்தங்களும் ஏற்படாமல் இருந்தால் எப்படியிருக்கும்?

மிகவும் ஆனந்தமாக இருப்பீர்கள் இல்லையா? சக் திவாய்ந்தவராக, அதிகாரமுடையவராக இருப்பீர்கள் இல்லையா? அனைத்து செல்வங்களையும் பெற்றிருப் பீர்கள் இல்லையா?

அதிர்வலைகள்தான் நமக்கு மிகப் பெரிய செல்வத் தைத் தருகிறது. இந்த அதிர்வலைகள் பிரபஞ்ச சக்தி யோடு ஒத்திசைந்திருக்கும் பொழுதுதான் மிகப் பெரிய செல்வம் நம்மை வந்து சேர்கிறது என்பதை பற்றியெல் லாம் முந்தைய அத்தியாங்களிலேயே விளக்கமாகப் பார்த்துவிட்டோம்.

அது எல்லாம் புரிகிறது. ஆனால், இதை நான் எப் படி எனக்குள் உருவாக்குவது? என்று கேட்பீர்கள் என் றால்...

அந்தக் கேள்விக்கு ஒரு மிகப் பெரிய தீர்வாக அமையக் கூடியது நம்முடைய ‘அல்கெமி’ வகுப்பு.

இது எப்படி எல்லாம் பலன் தருகிறது? இதற்கு வயதோ, தொழிலோ ஒரு பொருட்டல்ல என்பதைப் பற்றியெல் லாம்கூட முந்தைய அத்தியாயங்களிலேயே தெளிவா கக் கூறியிருக்கிறேன்.

உங்களில் பலருக்கும் 'அல்கெமி' வகுப்பிற்கு வந்தால் தான் பிரபஞ்ச சக்தியோடு ஒத்திசைந்து நான் இருக்க முடியுமா? இதற்கான ஒரே தீர்வு இந்த வகுப்பு மட்டும் தானா என்றெல்லாம் கேள்விகள் எழுகின்றன. அப்ப டித்தானே?

அவசியமில்லை, அந்தக் காலத்தில் சித்தர்கள் இதற் குண்டான விஷயங்களைக் கண்டுபிடித்து வைத்திருக் கின்றனர். அதாவது, ஒத்திசைவாக இருக்கக்கூடிய பல விஷயங்களை அவர்கள் செய்திருக்கின்றனர். அதற் குண்டான பல வழிகளை அவர்கள் உருவாக்கியிருக் கின்றனர்.

அதிர்வலைகள், ஒத்திசைவு என்றெல்லாம் சொல்கிறீர் கள். எனக்கு ஒன்றும் புரியவில்லை என்கிறீர்களா?

அதிர்வலைகளையும் ஒத்திசைவையும் பற்றிச் சொல்வ தற்கு முன்னால், இதற்கு ஒரு முக்கியமான ஆக்கக்கூறு இருக்கிறது. அதைப்பற்றி நீங்கள் கட்டாயம் தெரிந்து கொள்ள வேண்டும்.

இந்த உலகின் பெரும்பகுதியானது நீரால் அமையப் பெற்றது. நீரின்றி இந்த உலகமே இயங்காது.

அதுமட்டுமின்றி மனித உடலின் பெரும்பகுதியும் நீரால் அமையப் பெற்றதுதான். உடலின் நீர் அளவு சற்று குறைந்தாலும் போதும் பல உபாதைகள் வரும்.

இப்படி உள்ளும் புறமும் முற்றிலுமாக நீரால் சூழப்பட்டி ருப்பதுதான் இந்தப் பிரபஞ்சம்.

இதைத்தான் திருவள்ளுவரும் மூன்றே வார்த்தைக ளில், 'நீரின்றி அமையாது உலகு' என்று நீரின் இன்றிய மையைப் பற்றி ஆணித்தரமாகக் கூறியிருக்கிறார்.

அப்படிப்பட்ட நீருக்கும் செல்வத்திற்கும் நமக்கும் இந்தப் பிரபஞ்சத்திற்கும் நேரடித் தொடர்பு இருக்கிறது.

அதாவது எல்லாவற்றினோடும் நீருக்கும் தொடர்பு இருக்கிறது. "Water is the connecting point."

ஏனென்றால், நமக்கும் அதிர்வலைகளுக்கும் இந்த பிர பஞ்சத்திற்கும் இடையிலான ஒரு மிகப் பெரிய பாலமாக, ஒரு தொடர்பாக நீர் இயங்கிக்கொண்டிருக்கிறது.

நீரை ஒரு மிகப் பெரிய உணர்வாளர் என்றே சொல்ல லாம்.

நீங்கள் செல்வத்தை வரவழைப்பதற்காக பல முயற்சி கள் செய்கிறீர்கள் அல்லவா?

உங்கள் வீட்டில் ஒரு பணக்கஷ்டம் வருகிறது என்றால். உடனடியாக என்ன செய்வீர்கள்? ஜாதகத்தை எடுத்துக் கொண்டு ஒரு ஜோசியக்காரரிடம் செல்வீர்கள். அவர், வீட்டில் ஒரு கணபதி ஹோமம் செய்யுங்கள். ஒரு லக்ஷ்மி ஹோமம் செய்யுங்கள் என்று ஏதாவது ஒரு பரிகாரத் தைச் செய்யச் சொல்வார். நீங்களும் அதைச் செய்தால் எல்லாம் சரியாகிவிடும், செல்வம் பெருகும் என்ற நம் பிக்கையில் செய்ய முயற்சிப்பீர்கள்.

கணபதி ஹோமம் என்றால் என்ன? ஒரு ஐயரை வர வழைத்து வீட்டில் ஹோமகுண்டம் வளர்த்து ஹோமம் செய்வது.

சரி, அதை எப்படிச் செய்வார்கள்? ஒரு கலசத்திற்குள் நீரை நிறைத்து, அதில் ஐயர் தொடர்ந்து ஒரு மந்தி ரத்தை உச்சரிப்பார். அதற்கென்றே இருக்கும் ஒரு மந்தி ரத்தை இடைவிடாமல் உச்சரிப்பார். அந்த மந்திரத்தை உச்சரிக்க உச்சரிக்க அது ஒரு குறிப்பிட்ட அதிர்வை அந்த இடத்தில் உருவாக்குகிறது.

நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள். இந்த அதிர்வுதான் உங்களுக்கு செல்வத்தைக் கொடுக்கப் போகிறது.

அது எப்படி?

மந்திர உச்சாடனத்தால் ஏற்படுகின்ற அதிர்வு. அந்த கலசத்தில் இருக்கும் நீரில் பதிவாகி இந்தப் பிரபஞ்ச சக்தியை அடைகிறது. அந்த நீரை வீடு முழுவதும் தெளிப்பார்கள். அதுதான் உங்களுக்கு சுபிட்க்ஷத்தைக் கொடுக்கிறது.

இது ஒரு செயல்முறை.

இதுவே ஒரு கோவில் என்று வையுங்கள். கோவி லுக்கு வருகின்றவர்களுக்கு உடல் ஆரோக்கியம், மன ஆரோக்கியம், வியாபாரத்தில் இருக்கக்கூடிய பிரச்சி னைகள் என எல்லாப் பிரச்சினைகளுக்கும் ஒரு தீர்வு காண்பதற்காக கோவிலுக்குச் சக்தி கொடுக்க வேண் டும். மாபெரும் சக்திகளை ஒருங்கிணைத்து சித்தன் உருவாக்கிய ஒரு சக்தி பீடம்தான் கோவில் என்று சொல்லலாம்.

பல பெரிய பெரிய கோவில்கள் எல்லாம் சித்தர்களால் உருவாக்கப்பட்டதுதான். அந்தக் கோவில்களில் சக்தி குறையும்போது கும்பாபிஷேகம் செய்கிறார்கள்.

பன்னிரண்டு வருடங்களுக்கு ஒருமுறை கும்பாபிஷே கம் நடத்தப்படுகிறது. இதில் முக்கியமான விஷயம் என் னவென்றால் இந்த கும்பாபிஷேகத்திற்கு ஒரு 48 நாட் கள் மண்டல பூஜை செய்வார்கள். அதிலும் நீரை வைத் துதான் மந்திரம் உச்சரிப்பார்கள்.

அந்த மந்திரங்கள் அதிர்வலைகளை ஏற்படுத்தும். அது நீரில் பதிவாகும். அந்த நீரை எடுத்து கலசத்தில் ஊற் றுவார்கள். அது கர்ப்பக்கிரகத்தோடு ஒரு தொடர்பில் இருந்து, பிராண பிரதிஷ்டையை உருவாக்கி, அங்கு உயிரோட்டத்தைக் கொடுக்கிறது.

இப்படி, மறுபடியும் அந்தக் கோவிலுக்கு மிகப் பெரிய சக்தி கிடைத்துவிடுகிறது. இது மறுக்கமுடியாத உண்மை.

அந்த நீரைத்தான் கும்பாபிஷேகம் முடிந்ததும் நம் மீது தெளிக்கிறார்கள். கும்பாபிஷேகத்தன்று பார்த்தீர்கள் என்றால் பல லட்சம் மக்கள் கோவிலுக்கு வருவதே ஒரு துளி நீர் தன் மீது படவேண்டும் என்பதற்காகத்தான். ஏனென்றால் அதற்குள்தான் அந்த அதிர்வு இருக்கிறது.

இரண்டு விஷயத்தை நீங்கள் நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டும்.

ஒன்று, நீருக்கும் செல்வத்திற்கும் ஆரோக்கியத்திற்கும் சம்பந்தம் இருக்கின்றது.

இரண்டாது விஷயம், அதிர்வின் மூலமாகத்தான் அது தொடர்பில் இருக்கின்றது.

அதற்காக நீங்கள் இந்த வகுப்பிற்கு வந்துதான் இதைச் செய்யவேண்டும் என்பதில்லை. இதுபோல நிறைய சடங்குகள் இயற்கையில் நம் சித்தர்கள், முன்னோர்கள் உருவாக்கி வைத்திருக்கிறார்கள்.

காலையில் எழுந்து, மந்திரம் சொல்லி, சாமி கும்பிடுவது. கோவிலுக்குச் செல்வது. கும்பாபிஷேகம் செய்வது. மந் திரங்கள் உச்சரிப்பது. யாகங்கள் நடத்துவது. இப்படிப் பல வழிகள் இருக்கின்றன.

இது எல்லாமே அதிர்வுகள்தான். இந்து மதத்தில் இருக் கக்கூடிய பலவகையான சடங்குகள் எல்லாமும் இந்த ஒத்திசைவிற்காக உருவாக்கப்பட்டவைதான்.

அதன் மூலமாகவும் இந்தப் பலனைக் கண்டிப்பாகப் பெறமுடியும். பல்லாயிரக்கணக்கானவர்கள் பெற்றிருக் கவும் செய்கிறார்கள்.

இந்தப் பழக்கவழக்கங்கள் எல்லாம் பண்டைய காலம் தொட்டே இருந்துவந்திருக்கின்றன.

இந்து மதத்தில் என்று மட்டுமில்லை. ஒவ்வொரு மதத்திலும் ஒவ்வொரு விதமான சடங்குகள், நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள் இருக்கின்றன.

கிறிஸ்துவர்களை எடுத்துக்கொண்டால் அவர்கள் நீரைப் பயன்படுத்திதான் 'ஞானஸ்நானம்' செய்கிறார்கள். இஸ்லாமியர்கள் சம்சம் நீர் என்று சம்சம் கிணற்று நீரை புனித நீராகப் பயன்படுத்துகிறார்கள். புத்த மதம், ஜென் மதம் என்று இந்த உலகில் உள்ள அனைத்து மதத்திலும் நீர் புனிதமான ஒன்றாகவே கருதப்பட்டுவருகிறது. அனைத்து விதத்திலும் நீர் இன்றியமையாத முக்கியப் பங்கும் வகிக்கிறது.

இது எல்லாமே ஒரு விஞ்ஞானம்தான்.

ஆனால், மக்களுக்கு இதற்குப் பின்னால் இருக்கக்கூடிய விஞ்ஞானம் தெரியவில்லை.

உங்களுக்கு உடல்நிலை சரியில்லை என்றால் கோவிலில் தரப்படும் தீர்த்தத்தைக் கொண்டுவந்து குடிக்கச் சொல்வார்கள். பாவங்கள், தோஷங்கள் தீர்வதற்காகப் புனித நீரில் குளிக்கச் சொல்வார்கள். அனைத்துப் பிரச்சினைகளுக்கும் கோவிலில் கிடைக்கும் தீர்த்தம் மருந்தாகிறது.

என்ன காரணம்? கோவில்களில் இடைவிடாது செய்கின்ற பூஜைகள் மந்திரத்தால் நீரில் அதிர்வுகள் ஏற்றப்படுகின்றன. அந்த நீரைப் பருகும்போது நிறைய நற்பலன்கள் கிடைக்கின்றன.

உடல்நிலை சரியில்லை என்றால் தன்வந்திரி மந்திரம், நன்றாகப் படிப்பதற்கு ஹயக்ரீவர் மந்திரம் என்று ஒவ்வொன்றிற்கும் ஒரு மந்திரம் இருக்கிறது.

மந்திரம் என்று சொன்னாலே அது அதிர்வோடு சம்பந்தப்பட்ட விஷயம்தான்.

மந்திரத்தினால் நீரில் அதிர்வலைகள் உருவாகுகின்றன. நம் உடலின் மொத்த எடையளவில் கிட்டத்தட்ட 70 சதவிகிதம் நீர் நிறைந்திருக்கிறது. நம் உடலின் அனைத்துப் பகுதிகளுக்கும் ரத்த நாளங்கள் செல்கின்றன.

அப்படியென்றால் நாம் மந்திரங்களை உச்சரிக்கும் போது வெளியில் இருக்கும் நீரில் மட்டுமின்றி நம் உடலுக்குள் ஓடும் ரத்தத்தில் உள்ள நீரிலும் அதிர்வலைகள் ஏற்பட்டு உடலில் சக்தி மேலோங்குகிறது.

காலையில் எழுந்து ஒரு அரைமணி நேரம் மந்திரம் சொன்னாலே இவ்வளவு பலன் கிடைக்கிறது. கணபதி ஹோமம் ஒரு வருடத்திற்கு ஒரு முறை செய்தாலே இவ்வளவு பலன் கிடைக்கிறது. பன்னிரெண்டு வருடத்திற்கு ஒருமுறை நடக்கும் கோவில் கும்பாபிஷேகத்திற்கு சென்று வந்தாலே இவ்வளவு பலன் கிடைக்கிறது என்றால்? நம் உடலில் இருக்கும் நீர் முழுவதிலும் அந்த அதிர்வலைகள் எப்போதும் நிறைந்திருந்தால்? எவ்வளவு பலன்கள் கிடைக்கும் என்று யோசித்துப் பாருங்கள்.

நம்மை நேரடியாக முழு நேரம் இந்த உணர்வுக்குள் கொண்டுவருவதுதான் அல்கெமியின் நோக்கம்.

இது அந்தக் காலத்தில் குருகுலத்தில் சொல்லிக்கொடுக்கப்பட்ட விஷயம். இதைத்தான் நம்முடைய அல்கெமி வகுப்பிலும் செய்கிறோம். பலனைப் பல்லாயிரம் மடங்கு பெருக்குவதற்கான ஒரு வாய்ப்பு இந்த வகுப்பில் இருக்கிறது.

அல்கெமி செயல்முறையில் (Process) நாம் என்ன செய்கிறோம் என்றால், எப்போதுமே நீங்கள் அந்த ஒத்திசைவோடு இருப்பதற்கு உண்டான ஞானத்தை உங்களுக்குள்ளே புகுத்துகிறோம்.

காலையில் ஓர் அரை மணிநேரம் மந்திரம் சொல்வதில் கிடைக்கின்ற பலன்களைக் காட்டிலும் இது அதிகம்.

வகுப்பென்றால் பாடம் நடத்துவதோ அல்லது ஒரு விஷயத்தைச் சொல்லிக்கொடுப்பதோ கிடையாது.

இது ஓர் அனுபவப்பூர்வமான நிகழ்வு.

இதில் உங்களுக்கு ஒரு மிகப் பெரிய ஞானம் கிடைக்கிறது. 24 மணிநேரமும் அதிர்வை அவ்வப்போது உருவாக்கி ஒரு ஒத்திசைவோடு வாழும்போது கிடைக்கின்ற பலன் பல்லாயிரக்கணக்கான மடங்கு அல்லவா?

அதற்காகத்தான் இந்தச் செயல்முறையைச் சொல்லிக் கொடுக்கின்றோம்.

அதாவது ஒரு விஷயத்தை யாரோ ஒருவர் செய்துவிட்டுப் போவதிலேயே நமக்குப் பலன் கிடைக்கின்றது. ஒரு ஐயரை அழைத்துச் செய்வதிலேயே இவ்வளவு பலன் கிடைக்கின்றது என்றால், தானாகவே அந்த ஒத்திசைவில் எப்போதும் நீங்கள் இருந்துகொண்டே இருந்தால் எப்படியிருக்கும்?

கோவிலில் கும்பாபிஷேகம் நடத்தியதால் ஏற்பட்ட அதிர்வு ஒருநாள் பட்டதற்கே இவ்வளவு புண்ணியம் என்று சொன்னால், தினந்தோறும் வீட்டில் குளித்துக் கொண்டிருக்கின்ற நீரையே அந்த சக்தியாக மாற்றிவிட்டோம் என்று சொன்னால், எவ்வளவு பலன் கிடைக்கும் என்று சிந்தித்துப் பாருங்கள்.

அந்த விஞ்ஞானத்தைத்தான் அல்கெமியில் கற்றுக் கொடுக்கின்றோம்.

இது உங்களுக்குக் கிடைக்கக்கூடிய ஒரு மிகப் பெரிய வாய்ப்பு. இது நேரடியாக உணரப்படவேண்டிய ஒன்று. இது அறிவாக புத்தகத்தில் படிக்கக்கூடிய பொருள் அல்ல.

இந்த வகுப்பின் மூலமாக ஒருவரின் இயக்க முறை யையே (Operating System) நாங்கள் மாற்றுகின்றோம். ஒருவருடைய மனநிலையை சரியான பாதைக்குக் கொண்டுவந்து நிறுத்தக்கூடிய செயல்முறையைக் கண் டுபிடித்து வைத்திருக்கின்றோம்.

இதனால், நீங்கள் தானாகவே அதிர்வலைகளோடு ஒத் திசைந்துவிடுவீர்கள்.

உதாரணமாக, வானொலியில் ஒரு பாட்டு கேட் டுக்கொண்டிருக்கிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். பாடல்கள் எல்லாம் அலைவரிசையாக நம்மைச்சுற்றி இருக்கின்றன. என்றாலும் குறிப்பிட்ட அந்த வானொலி அலைவரிசைக்கு ட்யூன் செய்தால் மட்டுமே பாடலைக் கேட்க முடியும்.

ட்யூன் செய்யத் தெரியவில்லை என்றால் அந்தப் பாடலை கேட்க முடியாது. என்னதான் தலைகீழாக நின் றாலும் பாடல் வராது. பாட்டு வரவில்லை என்பதற்காகப் பாடல் இல்லாமலே போய்விடுமா?

அது போல உங்களுக்கு செல்வம் வரவில்லை என்பதற் காக செல்வம் இல்லாமலே போய்விடுமா?

உண்மையில் அப்படி எதுவுமில்லை. நீங்கள் சரியாக ட்யூன் செய்யவில்லை, அவ்வளவுதான். 98.4 அலைவரி சையில் சரியாக ட்யூன் செய்து வைக்கும் பொழுது பாட லைத் தேடி நீங்கள் செல்லவேண்டியதில்லை. உங்க ளைத் தேடி பாடல் வரும்.

அப்போது நீங்கள் சரியான நிலையில் இருக்கின்றீர்கள் என்று அர்த்தம்.

யாரோ ஒருவர் அவருடைய ரேடியோவை அவ்வப்போது போட்டுக் காண்பித்துவிட்டு போவது எப்படியிருக்கும்?

நீங்களே நிரந்தரமாக அந்த நிலையத்திற்கு ட்யூன் ஆகி விட்டீர்கள் என்றால் எப்படியிருக்கும்?

நீங்கள் யாரையும் சார்ந்து இருக்கவேண்டிய அவசியம் இருக்காது இல்லையா? எப்போதுமே பாடல் உங்களுக்குச் சொந்தமாக இருக்கும். எப்போது வேண்டுமானாலும் கேட்கலாம்.

அந்த நிலைபாட்டுக்கு உங்களை ட்யூன் செய்வதுதான் இந்த நிகழ்ச்சியின் நோக்கம்.

அதனால்தான் இந்த வகுப்பை உலகம் முழுவதும் நாங்கள் செய்துகொண்டிருக்கின்றோம்.

வகுப்பிற்கு வந்தே தீரவேண்டும் என்று எந்த அவசியமும் இல்லை. வருவதும் வராமல் இருப்பதும் உங்கள் விருப்பம்.

வீட்டில் இருந்துகொண்டே இதைச் செய்ய முடிந்தது என்றால் தாராளமாகச் செய்யலாம். அது இன்னும் சிறப்பு.

செல்வம் உங்களைத் தேடி வந்தடைந்து, நீங்கள் விரும்பிய வாழ்க்கையை வாழ, தேவி இராஜ மாதங்கியைப் பிரார்த்திக்கிறேன். எல்லாம் செயல்கூட என் வாழ்த்துக்கள்!

- குரு மித்ரேஷிவா

# தேவி இராஜ மாதங்கி ஆலயம் பற்றி



**தேவி இராஜ மாதங்கி**

சகல வித்தைகளை அருளுபவளும் பத்து மகா வித்யாக்களுள் ஒருவருமான தேவி இராஜ மாதங்கிக்கு தமிழ்நாட்டில் ஓர் ஆலயம் எழுப்பும் பணியில் ஈடுபட்டுள்ளேன்.

சரஸ்வதியின் தாந்த்ரீக சொரூபமான இராஜ மாதங்கி அற்புத சக்திகளையும் அளவற்ற வலிமையையும் மானுடர்களைக் கவரும் ஆற்றலையும் ஆழமான அறிவையும் கலைச் செல்வங்களையும் தன்னை வழிபடுபவர்களுக்கு அளிப்பவள்.

ஸ்ரீகுல மரபில் இராஜ மாதங்கி மகாவித்யாக்களின் பிரத
மந்திரி என்றழைக்கப்படுகிறாள். குஜராத்திலோ அவள்
மோதேஸ்வரி. இந்தியா முழுக்க தேவி இராஜ மாதங்கி
பல்வேறு வடிவங்களில் வழிபடப்பட்டும், வணங்கப்பட்
டும் வருகிறாள்.

சகல விதமான வித்தைகளுக்கும் படைப்பாற்றலுக்கும்
அதிபதியான தேவி இராஜ மாதங்கி தேசத்தின் சுபிட்சத்
திற்குக் காரணமாக விளங்கி, அனைத்து உயிர்களுக்
கும் அருள்பாலிக்கிறாள்.

ஒரு மனிதனுக்குக் கிடைக்கக்கூடிய அத்தனை செல்
வங்களையும் அருளுகிற தேவி இராஜ மாதங்கியை
பிரதான தெய்வமாகக் கொண்டு, ஒரு மாபெரும் ஆல
யத்தை நிர்மாணிக்க உள்ளோம். சரஸ்வதியின் வடிவ
மான இராஜ மாதங்கி, இந்தத் தேசத்திற்கு அளவற்ற
அருளையும் ஆழமான ஞானத்தையும் காரிய சித்தியை
யும் அளிப்பாள்.

ஆலய வளாகத்தினை ஒட்டி அமையவுள்ள குருகுலம்
ஓர் ஆன்மிக மையமாக, வாழ்வியல் வழிகாட்டியாகத்
திகழும். 'வசுதைய்வ குடும்பகம்' எனும் இந்திய தரி
சனத்தின்படி உலக மக்களை ஒருங்கிணைத்து இந்து
ஞான மரபையும் இந்துப் பண்பாட்டின் மகத்தான அம்
சங்களையும் மானுடம் முழுமைக்கும் கொண்டு சேர்ப்
பது இந்த ஆன்மிக மையத்தின் நோக்கமாகும்.

இந்தப் பணியில் தங்களையும் இணைத்துக்கொள்ள
விரும்புபவர்களை தக்ஷிணா பவுண்டேசன் இருகரம்
நீட்டி வரவேற்கிறது.

நன்றி.